# இப்படிக்கு காலம்



- வரலாறு பேசும் காசு, பணம், துட்டு, மணி மணி
- உலகில் தோன்றிய முதல் வங்கி
- ஆலமரத்துக்கு அடியில் உருவான பங்குச்சந்தையின் வரலாறு

ஒலிபெயர்ப்பு

**லெனின் குருசாமி**

# மின்னூல் வெளியீடு

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

ஒலிபெயர்ப்பு : லெனின் குருசாமி - guru-leninn@gmail.com

அட்டைப்படம்: லெனின் குருசாமி - guru-leninn@gmail.com

மின்னூலாக்கம்: லெனின் குருசாமி - guru-leninn@gmail.com

மின்னூலாக்க செயற்திட்டம்: கணியம் அறக்கட்டளை - kaniyam.com/foundation

# Ebook Publication

Ebook Publisher: http://freetamilebooks.com

Transcription: Lenin Gurusamy - guruleninn@gmail.com

Cover Image: Lenin Gurusamy - guruleninn@gmail.com

Ebook Creation: Lenin Gurusamy - guruleninn@gmail.com

# பொருளடக்கம்

# மூலம்

- https://www.youtube.com/watch?v=wJmisop4j3g
- https://www.youtube.com/watch?v=H6tUtaz_ijo
- https://www.youtube.com/watch?v=UZPnXFVC3dU

# 1. வரலாறு பேசும் காசு,பணம், துட்டு, மணி மணி

பொருளீட்டும் உலகில் பணம் இன்றி அணுவும் அசையாது. பணம் என்ற ஒற்றைச் சொல்லுக்குள் தான் இந்த உலகம் கட்டுப்பட்டுக் கிடைக்கிறது. பணம் என்ற கருத்தாக்கம் தோன்றாத போது, இருப்பதைக் கொடுத்து சேவையைப் பெறும் காலமாக அமைந்தது. மனிதக்குலம் வியாபாரம் என்ற பொருளீட்டில் ஈடுபடத் தொடங்கியது ஆங்கிலத்தில் பார்ட்டர் என்று அழைக்கப்படும் பண்டமாற்று முறையில் தான். அடிமைகள் முதல் ஆட்டுக்குட்டி வரை வியாபாரம் என்பது இந்த பண்டமாற்று முறைக்குள்தான் அடங்கியிருந்தது.

கங்கை நதிப்புறத்துக் கோதுமைப் பண்டம்

காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்வோம் என்று மகாகவி பாரதியார் பாடுவதும் பண்டமாற்றின் சிறப்பைத்தான். இரும்புச் சாமான்களுக்கு பேரிச்சம்பழம், பழைய துணிகளுக்கு சில்வர் பாத்திரம் என்று பண்ட மாற்றம் நிகழ்வதைப் பார்த்த கடைசி தலைமுறையினர் இப்போதும் இருக்கிறார்கள். தடையற்ற உற்பத்தியையும் பற்றாக்குறையையும் பொருத்து தானியங்கள், பழங்கள், காய்கறிகள், உப்பு, பவளம், நவரத்தினங்கள், தங்கம், வெள்ளி, கால்நடைகள் என அனைத்து வர்த்தகங்களும் இந்த பண்டமாற்று முறையில் தான் இயங்கிக் கொண்டிருந்தன. பண்டமாற்றம் அந்த பொருளின் தன்மையையும் மதிப்பையும் பொறுத்து அமைகின்றன. ஒரு பொருளை உற்பத்தி செய்ய எடுத்துக்கொள்ளப்படும் உழைப்பையும் நேரத்தையும் அளவீடாக் கொண்டு

கணக்கிட்டு பொருட்களுக்கான மதிப்பீடு செய்வது வழக்கமாக இருந்தது. பிற்பாடு தங்கமும் வெள்ளியும் புழக்கத்திற்கு வந்ததையடுத்து இவ்விரு உலோகங்களின் எடைக்கு ஈடாக மற்ற பொருட்களின் மதிப்பு அளவீடு செய்யப்பட்டு பண்டமாற்றம் நிகழ்கிறது. பிறகு இரும்பு, செம்பு, பித்தளை ஆகிய உலோகங்களால் ஆன படி மற்றும் படிக்கற்கள் ஆகியவற்றின் எடையின் மதிப்பில் உற்பத்திப் பொருட்களின் மதிப்பு அளவிடப்பட்டாலும் பொருளுக்குப் பொருள் என்ற பண்டமாற்று முறையே தொடர்ந்தது. காலப்போக்கில் வணிகம் என்பது பெருக்கமடைந்து நவீன முறையை நோக்கி மெல்ல மெல்ல நகரத் தொடங்கியதும் இந்த பண்டமாற்று முறையில் பல சிக்கல்கள் எழத்தொடங்கின. உற்பத்தி பொருட்களை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் புலம்பெயரச் செய்வதிலும்,

தேவைப்படும் பொருள் கிடைக்காமலும் அதிக உற்பத்தியான பொருட்கள் தேங்குவதாலும் இதற்கான மாற்று வழிகளை நோக்கி மனிதர்கள் சிந்திக்கத் தொடங்கினர்.

இந்த சூழலில்தான் உலகம் முழுவதும் ஆங்காங்கே ஏராளமான அளவில் குறுநில மன்னர்களின் அரசு அமைப்புகள் முளைக்கத் தொடங்கின. அப்போது முதல் பண்டமாற்று முறை என்பது மெல்ல மெல்ல மறையத் தொடங்கியது. பண்டமாற்று முறைக்கு மாற்றாக எல்லோரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய பொதுவான முறையாகப் பணம் என்பது புழக்கத்திற்கு வந்தது. கிமு 700 ஆம் ஆண்டு வாக்கில் தற்போது துருக்கியில் மேற்குப் பகுதியில் அமைந்துள்ள லிடியா நாட்டில்தான் நாணயம் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளது. லிடியா நாட்டு மன்னரான கைஜாஸ் என்பவர் எலக்ட்ரான் என்ற பெயரில் நாணயத்தைப் புழக்கத்திற்குக்

கொண்டு வந்ததே பணம் தோன்றியதின் தொடக்க வரலாறாகக் கூறப்படுகிறது. இந்த எலக்ட்ரான் நாணயம் 25 விழுக்காடு வெள்ளியும் 75 விழுக்காடு தங்கமும் கலந்த கலவை. அவரை விதை போன்ற தோற்றம் கொண்டிருந்தது.

நாணய பயன்பாடு வசதியாக இருந்ததால் இந்த எலக்ட்ரன் நாணயம் கொடுக்கல் வாங்கல் வியாபாரத்தில் நீண்ட நாட்கள் புழக்கத்திலிருந்துள்ளது. கிரேக்க வர்த்தகர்கள் இந்த நாணயத்தின் வசதியை உணர்ந்து அதிக அளவு பயன்படுத்தத் தொடங்கியுள்ளனர். கால ஓட்டத்தில் எலக்ட்ரான் நாணயத்தின் உற்பத்தி செலவு அதிகரித்ததால் செலவைக் குறைக்கச் சிக்கன நடவடிக்கை எடுக்கப்பட்டது. விலையுயர்ந்த தங்கத்திற்குப் பதிலாகச் செம்பு உலோகம் பயன்படுத்தப்பட்டுள்ளது. எலக்ட்ரான் நாணயம் நாடு கடந்து புழங்கத் தொடங்கியது.

அந்த வகையில் இந்திய எல்லைக் கொள்ளும் நாணயச் செலாவணி வெற்றிகரமாக உள்ளே புகுந்தது. கிமு ஆறாம் நூற்றாண்டில் வேத காலத்தில் தோன்றிய மகாஜனபதாஸ் அரசு தங்கம் வெள்ளியால் உருவாக்கப்பட்ட நாணயங்களை அறிமுகப்படுத்தியது.

அடுத்ததாக மௌரியர் காலத்தில் ருபயா என்ற பெயரில் அடுத்தடுத்து பல நாணயங்கள் வெளியிடப்பட்டதாக கவுடில்யர் எழுதிய அர்த்தசாஸ்திரம் நூலில் பதிவாகியுள்ளது. இன்று அன்றாடம் நாம் அதிக அளவில் மிகச் சாதாரணமாக உதிர்க்கும் ரூபாய் என்ற வார்த்தை ருபயா என்ற சமஸ்கிருத மொழியில் இருந்துதான் தோன்றியது. இந்திய வரலாறு கிமுவிலிருந்து கிபிக்கு நகர்ந்த பின்னர் நாணயத்தின் வளர்ச்சியின் வேகம் எடுக்கத் தொடங்கியது. இன்று இந்திய எல்லை

என்ற வரையறைக்குள் உட்பட்ட அன்றைய பண்டைய இந்தியாவில் ஆட்சி புரிந்த எல்லா அரசுகளுமே தங்கத்தினாலும் வெள்ளியினாலும் உருவாக்கப்பட்ட நாணயங்களைப் புழக்கத்தில் விட்டுள்ளனர்.

முகலாயர் காலத்தில் முகமது பின் துக்ளக் ஆட்சியின்போது நாணய வரலாற்றில் ஒரு புது வித குழப்பம் ஏற்பட்டது. நாணயங்களை அச்சடிக்கத் தேவையான தங்கத்திற்கும் வெள்ளிக்கும் அதிக அளவில் கடும் தட்டுப்பாடு ஏற்பட்டது. அதற்கான மாற்று வழியை யோசித்த முகமது பின் துக்ளக் தங்கம் வெள்ளிக்கு மாற்றாகப் பித்தளை செம்பு உலோகங்களைப் பயன்படுத்தி நாணயங்களை அச்சடித்து வெளியிட்டார். ஆனால் அவர் செய்த மாபெரும் தவறு என்னவென்றால் பாதுகாப்புக்கு என செய்யப்படும் பிரத்தியேக குறியீடுகளைப் பொறிக்காமல் நாணயங்களை மிக எளிதான

முறையில் அச்சிட்டு வெளியிட்ட தான். இதனால் மனம் போன போக்கில் வீட்டுக்கு வீடு போலி நாணயங்கள் தயாரிக்கப்பட்டு புழக்கத்திற்கு வந்தன. இதனால் முகமது பின் துக்ளக் ஆட்சி எல்லைக்கு உட்பட்ட பகுதிகளில் போலி நாணயங்கள் கணக்கில்லாமல் புழங்கின.

இதனால் பொருளாதார சீர்கேடு ஏற்பட்டது. ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகத்தில் ஈடுபட்டிருந்த வெளிநாட்டு வணிகர்கள் முகமது பின் துக்ளக் அரசின் நாணயங்களை வாங்க மறுத்தனர்.

அதற்குப் பதிலாகப் பழைய தங்கம் வெள்ளியால் செய்யப்பட்ட நாணயங்களைக் கேட்டு வலியுறுத்தினர். பிரச்சினையைச் சமாளிக்க இயலாமல் திணறிய முகமது பின் துக்ளக் மீண்டும் தங்கம் வெள்ளியினால் செய்யப்பட்ட நாணயங்களையே அச்சிட

வேண்டிய நிலைக்குத் தள்ளப்பட்டார். இந்நிலையில் பாதுகாப்பு அம்சங்களுடன் கூடிய முறைப்படுத்தப்பட்ட வெள்ளி நாணயங்களை ஷெர்ஷா என்ற மன்னர் கிபி 1542 ஆம் ஆண்டு வெளியிட்டார். வெள்ளி நாணயங்கள் ஒவ்வொன்றிலும் அதன் எடையைக் கிராம் அளவிலும் நாணயங்களின் விலை மதிப்பையும் பொறித்து வெளியிட்டார். கல் தோன்றி மண் தோன்றா காலத்தே முன் தோன்றிய மூத்த குடி என்று தமிழ் குடிகளை பற்றி உயர்வாக கூறும் நம் தமிழ்நாட்டில் நாணயங்களின் பண்டைய வரலாறு பெரிய அளவுக்கு வெளிவரவில்லை. ஆனால் காலப்போக்கில் தமிழ் நிலத்தில் பணம் புழங்கியதற்கான வரலாறை தொல்லியல் ஆய்வுகள் ஓரளவு வெளிக்கொண்டு வந்துள்ளது. கல்வெட்டுகள் செப்பேடுகள் வெளிநாட்டு பயண குறிப்புகள் ஆகியவை

மூலம் இதுபற்றி ஆச்சரியப்படத்தக்க பல்வேறு தகவல்களைத் தெரிந்து கொள்ள முடிகிறது. சங்க காலத்தைப் பொறுத்தவரையில் சதுர வடிவிலான நாணயங்களும் புழக்கத்திலிருந்துள்ளன.

இதேபோன்று சேர சோழ பாண்டியர்களின் நாணயத்தில் ஒரு புறத்தில் வில் அம்பு புலி மீன் போன்ற சின்னங்களையும் மறுபுறத்தில் யானையின் உருவத்தையும் பொறித்த நாணயங்களை வெளியிட்டுள்ளனர். சில நாணயங்களில் கொல்லிப்புரை, குட்டுவன் கோரை மாக்கோதை என்றெல்லாம் பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. பணப் பரிமாற்றத்தில் மிளகு, சந்தனம், முத்து மற்றும் பல்வேறு வாசனை பொருட்களைத் தமிழகத்திலிருந்து வாங்கிச் சென்றதற்கு அடையாளமாகக் கோவை மாவட்டத்தில் ரோமானிய காசுகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன.

சங்க காலம் முடிவுற்றப் பின்பு ஈயத்தில் வடிவமைக்கப்பட்ட காசுகள் புழக்கத்தில் இருந்ததற்கான சான்று மதுரை மாவட்டம் ஆண்டிப்பட்டியில் கிடைத்துள்ளன. அவ்வாறு கண்டெடுக்கப்பட்ட ஈய நாணயங்களில் அதின்னன், எதிரான், சேந்தன் என்ற பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. பல்லவர் ஆட்சி காலத்தில் நாணயங்களில் கப்பல் உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. பாண்டியர்கள் காலத்தில் நாணயங்களில் மன்னர்களின் பெயரால் மற்றும் செம்பால் செய்யப்பட்ட நாணயங்கள் வெளியிடப்பட்டுள்ளன. கிமு 3லிருந்து இரண்டாம் நூற்றாண்டுகளில் பெருவழுதி நாணயம் வெளியிடப்பட்டதாக நாணயவியல் அறிஞர்கள் கூறுகின்றனர். சோழர்களின் ஆட்சியில் ராஜராஜ சோழன் கால நாணயங்களில் ஸ்ரீராஜராஜ என்ற எழுத்தும்

ராஜாவின் உருவமும் பொறிக்கப் பட்டுள்ளது. ராஜேந்திர சோழன் வெளியிட்ட வெள்ளி நாணயத்தில் கங்கை கொண்ட சோழன் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. 3 பேரரசுகளை அவர் வென்றதால் சேர சோழ பாண்டிய சின்னங்கள் அவரது நாணயங்களில் பொறிக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு காலப்போக்கில் நாணயங்கள் தொடர்பான பிரச்சினைகள் தீர்க்கப்பட்டு வந்தாலும் அதிக எடை அளவிலான நாணயங்களை ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு மூட்டை கட்டி தூக்கிச் செல்வதில் பல சிரமங்கள் ஏற்பட்டன. அதன்பிறகுதான் நாணயங்களுக்கு மாற்றாக முதன்முதலில் காகிதத்தில் அச்சடிக்கப்பட்ட எடை குறைந்த ரூபாய் நோட்டு அறிமுகமானது. உலகிலேயே முதன் முதலாகத் தாளால் செய்யப்பட்ட நாணயத்தைச் சீனர்களே வெளியிட்டனர்.

தாளைக் கண்டுபிடித்தவர்களும் சீனர்களை என்பதால் நாணயமாகவும் அதைப் பயன்படுத்தத் தொடங்கினர். ஷியோ ஷி என்ற பெயரில் சென் ஜாங் என்ற மன்னர் காலத்தில் 997ல் அறிமுகப்படுத்தப்பட்டது.

கி.பி 1661 ஆம் ஆண்டு ஜூலை மாதம் ஸ்வீடன் நாட்டில் ஸ்டாக்ஹோமில் உள்ள ஒரு வங்கி தான் உலகிலேயே முதன் முதலில் அனைவரும் ஏற்றுக் கொள்ளும் விதத்திலான காகிதத்தில் அச்சிட்ட பணம் வெளியிடப்பட்டது.

ஆனால் இந்தியாவைப் பொருத்தமட்டில் மிகமிக காலதாமதமாகவே ரூபாய் நோட்டு புழக்கத்திற்கு வந்தது. பிரிட்டிஷ் காலணி ஆட்சிக் காலத்திலும் உடனடியாக காகித ரூபாய் நோட்டு புழக்கத்திற்கு வரவில்லை. தங்கம் வெள்ளியாலான நாணயங்கள் புழக்கத்தில்

விட்டனர்.

இந்த நிலையில் எதிர்பாராத திருப்பமாக 1917 ஆம் ஆண்டு வாக்கில் முதலாம் உலகப்போர் தொடங்கியதைத் தொடர்ந்து இந்தியா மட்டுமன்றி உலகம் முழுக்க வெள்ளிக்கு கடும் தட்டுப்பாடு ஏற்பட்டது. இதை அடுத்தே வேறு வழியின்றி இந்தியாவில் முதன்முதலாக ஒரு ரூபாய் மட்டும் காகிதத்தில் அச்சடித்து பிரிட்டிஷ் அரசாங்கம் வெளியிட்டது. அதுவே காகித ரூபாய் நோட்டு இந்தியாவில் தடம் பதித்த வரலாறாகும்.

ஆனால் வெள்ளி நாணயங்களையே புழங்கிய இந்திய மக்களுக்குப் புதிதாகக் காகிதத்தில் அச்சடித்த ஒரு ரூபாய் நோட்டை ஏற்க மனரீதியாக இயலாமல் பதற்றத்தில் ஆழ்ந்தனர். காகிதத் துண்டுகளை ஒரு விலையற்ற மதிப்பற்ற பொருளாகவே பார்க்கத்

தொடங்கினார்கள். இதனால் கையிலுள்ள காகித ஒரு ரூபாய் நோட்டுகளை வெள்ளி நாணயங்களாக மாற்றுவதற்கு வங்கிகளுக்குப் படை எடுத்தனர். இதனால் காகித ஒரு ரூபாய் நோட்டு மதிப்பிழந்து போனது. மறுபுறம் வெள்ளி உலோகத் தட்டுபாடால் செய்வதறியாது திகைத்தது பிரிட்டிஷ் அரசு. நிலைமையைச் சமாளிக்க நட்பு நாடான அமெரிக்காவிடம் வெள்ளி உலோகம் கேட்டு வேண்டி நின்றது பிரிட்டிஷ் அரசு. 1917 ஆம் ஆண்டு 50 லட்சம் கிலோ வெள்ளி உலகத்தை இந்தியாவிற்கு அனுப்பி பிரிட்டிஷ் அரசுக்கு உதவியது அமெரிக்கா. மீண்டும் இந்தியாவில் வெள்ளி நாணயங்கள் புழக்கத்திற்கு வந்து மக்களின் அச்சம் தீர்த்து வைக்கப்பட்டது. பிறகு படிப்படியாகக் காகித ரூபாய் நோட்டுகளையும் இந்திய மக்கள் நம்பிக்கையுடன் ஏற்றுக் கொள்ளத் தொடங்கினார்கள். நாணயங்கள்

அச்சிடும் உரிமையை முகலாய அரசர்கள் மற்றும் இந்து மன்னர்களிடம் இருந்து பெற்ற பிரிட்டிஷ்காரர்கள் சென்னையில் நாணய சாலையை நடத்தியுள்ளனர். ஆங்கிலேயர், பிரெஞ்சு, டச்சு, டேனிஸ்காரர்களும் தனித்தனியே நாணயங்களை அச்சடித்துள்ளனர்.

தமிழ்நாட்டிலும் பணத்தின் வரலாறு நீண்ட நெடிய பயணத்தைக் கொண்டுள்ளது. தமிழ்நாட்டில் விஜயநகரப் பேரரசுக்கு முன்புவரை நாணயங்களில் எந்த மதத்தின் கடவுளர்களின் உருவங்களும் அச்சிடப்படவில்லை. முதன்முதலாக விஜயநகரப் பேரரசின் காலத்தில் தான் கிருஷ்ணன், விஷ்ணு, சிவ பார்வதி, அனுமன், கருடன், சங்கு சக்கரம் உருவங்கள் பொறிக்கப்பட்ட நாணயங்கள் அச்சடிக்கப்பட்டன.

இதேபோன்று சென்னையை பொருத்தமட்டில்

விஜயநகர அரசின் பிரதிநிதியான வெங்கடாத்ரி என்பவரிடமிருந்து 1639 ஆம் ஆண்டு மெட்ராஸ் நிலப்பகுதியை வாங்கிய கிழக்கிந்தியக் கம்பெனி கூடவே இங்கு நாணயங்களை அச்சிட்டு புழக்கத்தில் விடும் உரிமையையும் பெற்றது. எனவே தமிழகத்தின் தற்போதைய தலைமைச் செயலகமான புனித ஜார்ஜ் கோட்டைக்குள் ஒரு நாணய தொழிற்சாலை தொடங்கப்பட்டது. இங்கு வசித்த சில குறிப்பிட்ட சமூகத்தினர் இணைந்து ஒப்பந்த அடிப்படையில் நாணய தொழிற்சாலையை நடத்தி வந்தனர்.

நாணயத்தை உற்பத்தி செய்யத் தேவையான தங்கத்தை கிழக்கிந்தியக் கம்பெனி இறக்குமதி செய்தது. பின்னர் 1850ஆம் ஆண்டு வாக்கில் இந்த நாணயக் கூடத்தை கிழக்கிந்திய கம்பெனியே இயக்க முடிவு செய்தது. கிழக்கிந்திய கம்பெனி வரும்வரை விஜயநகர அரசின் நாணயங்கள்

தான் சென்னையில் புழக்கத்தில் இருந்துள்ளன. இந்து மதக் கடவுளான விஷ்ணுவின் வராக அவதாரம் பொறித்த நாணயங்கள் விஜயநகர தங்க வராகங்கள் என்று அழைக்கப்பட்டன. இதனிடையே கிழக்கிந்தியக் கம்பெனியும் நாணயங்களை வெளியிட்டதால் அவை மெட்ராஸ் வராகங்கள் என்று அழைக்கப்பட்டன. 1692 ஆம் ஆண்டு முதல் முகலாயர்களின் வெள்ளி நாணயங்களையும் அடித்துக் கொள்ளும் உரிமை இந்த நாணய கூடத்திற்கு அளிக்கப்பட்டது. பொது மக்கள் தங்களிடம் உள்ள தங்கத்தைக் கொடுத்து மெட்ராஸ் அல்லது முகலாய நாணயங்களாக மாற்றிக்கொள்ளவும் அனுமதிக்கப்பட்டது. இந்நிலையில் 1742 ஆம் ஆண்டு வாக்கில் சென்னை சிந்தாதிரிப்பேட்டையில் மற்றொரு நாணய தொழிற்சாலையும் தொடங்கப்பட்டது.

50 ஆண்டுகளுக்குப் பிறகு இந்த

இரண்டாவது தொழிற்சாலையும் புனித ஜார்ஜ் கோட்டைக்கு இடம் பெயர்ந்தது. இப்போது புனித ஜார்ஜ் கோட்டைக்குள் இயங்கிய நாணய தொழிற்சாலைகளின் எண்ணிக்கை 2ஆக உயர்ந்தது. 1815 ஆம் ஆண்டு ரூபாய், அணா, பைசா ஆகிய மதிப்புகளில் நாணயங்களை அச்சடிக்கத் தொடங்கியதால் நாணய தொழிற்சாலையின் பணி பல மடங்கு அதிகரித்தது. எனவே கோட்டைக்கு வெளியே ஒரு பெரிய நாணய தொழிற்சாலை அமைப்பது குறித்தும் விவாதிக்கப்பட்டது. ஜார்ஜ் டவுனின் வடக்குப் பகுதியில் பயன்பாடற்றுக் கிடந்த வெடிமருந்து தொழிற்சாலையில் நாணய தொழிற்சாலை ஆக மாற்றவும் முடிவு செய்யப்பட்டது. இவ்வாறு சென்னையில் உருவான நாணய உற்பத்தி தொழிற்சாலை அமைந்த பகுதி தான் மின்ட் ஸ்ட்ரீட், வள்ளலார் நகர் போன்ற பெயர்களில்

அழைக்கப்படும் தங்கசாலை. இந்த தொழிற்சாலை 1842 ஆம் ஆண்டு நாணயங்களை அச்சிடும் பணியைத் தொடங்கியது. இதனிடையே மும்பை மற்றும் கொல்கத்தா ஆகிய நகரங்களில் 2 நாணய தொழிற்சாலைகளை கிழக்கிந்தியக் கம்பெனி தொடங்கியது. இதனால் சென்னை மின்ட் பகுதியில் இயங்கிய நாணய உற்பத்திச் சாலை தேவை இல்லாமல் போனது. எனவே சென்னையின் வரலாற்றுப் புகழ்மிக்க இந்த நாணய உற்பத்திச் சாலை 1869 ஆம் ஆண்டு மூடப்பட்டு அந்த இடத்தில் தற்போது தமிழ்நாடு அரசுக்குச் சொந்தமான அச்சகமும் இயங்கி வருகிறது.

இதனிடையே சென்னையில் 1810ம் ஆண்டு மாவட்ட ஆட்சியராக பணியாற்றிய ஆங்கிலேயர் எல்லிஸ் திருக்குறள் மீது தீராத பற்று கொண்டிருந்த காரணமாகத் திருவள்ளுவருக்கு

முதன்முதலாக உருவம் கொடுத்துத் தங்க நாணயத்தை வெளியிட்டது தமிழக வரலாற்றுச் சிறப்புமிக்க செயலாகக் கூறப்படுகிறது.

1935 ஆம் ஆண்டு வரை அரசாங்கத்திடம் இருந்த ரூபாய் நோட்டுகளை அச்சடிக்கும் அதிகாரம் ரிசர்வ் வங்கியின் கைகளுக்கு மாறியது. இதன் பிறகுதான் 2,5, 50, 100 ரூபாய் நோட்டுகள் இந்திய மக்களின் கைகளில் தவழ ஆரம்பித்தன.

காகிதத்தில் அச்சடிக்கப்பட்ட இந்த ரூபாய் நோட்டுகளில் பிரிட்டீஸ் அரசர்கள் மற்றும் அரசிகளின் படங்கள் நடைமுறையாக இருந்தது. இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு கடைசியாக 1950ஆம் ஆண்டு பிரிட்டிஷ் அரசர் நான்காம் ஜார்ஜின் படம் அச்சிடப்பட்ட இந்த நடைமுறை முற்றுப் பெற்றது. இதன் பிறகு இப்போது ரூபாய் நோட்டில் காணம் அசோகச்

சின்னம் பொறிக்கப்பட்ட ரூபாய் நோட்டுகள் அச்சடிக்கப்பட்டு புழக்கத்தில் வரத் தொடங்கின. 1966ஆம் ஆண்டு வாக்கில்தான் தேசத்தந்தை மகாத்மா காந்தியின் உருவப்படம் தாங்கிய ரூபாய் நோட்டுகள் புழக்கத்திற்கு வந்தன. ம

காத்மா காந்தி உருவப்படம் தாங்கிய ரூபாய் நோட்டு வடிவமைப்பு என்பது சட்ட நடைமுறைகளின் படி செயல்பட்டதல்ல. மகாத்மா, அரச பதவிகள் எதிலும் இடம்பெற்றதில்லை. ஆனாலும் இந்திய மக்கள் அனைவராலும் ஏற்கப்பட்ட மாபெரும் தலைவர் என்பதால் அவர் படம் பயன்படுத்தப்படுகிறது. மகாத்மா காந்தியின் உருவப்படம் முதலில் 10 மற்றும் 500 ரூபாய் கரன்சிகளில் அச்சிடப்பட்டன. அதன் பின்னர் ஐந்து மற்றும் 1000 ரூபாய் நோட்டிலும் மகாத்மா காந்தியின் இந்த படமே இடம்பெற்றுள்ளது. ரூபாய் நோட்டுகளில் நாம் காணும் மகாத்மா காந்தியின்

உருவப்படம் இங்கிலாந்து அரசியலில் பிரபல தலைவராக இருந்த லார்டு பிரெடரிக் லாரன்ஸ் என்பவருடன் உரையாடிக் கொண்டிருந்த போது எடுக்கப்பட்ட படமாகும். இந்த படத்தில் அவருடன் இணைந்து இருந்த மகாத்மா காந்தியின் உருவம் மட்டும் வெட்டி எடுக்கப்பட்டு இந்திய கரன்சிகளில் பயன்படுத்தப்படுகிறது. இந்தியாவில் தற்போது மும்பை, ஐதராபாத், டெல்லி, கொல்கத்தா ஆகிய இடங்களில் உலோக நாணயங்கள் அச்சிடப்படுகின்றன உலோக நாணயங்கள் அச்சிடப்படுகின்றன.

தெலுங்கானா மாநிலத்தில் ஹைதராபாத் நகரில் அச்சிடப்படும் நான் அங்கு ஒரு சிறு நட்சத்திரமும் தலைநகர் டெல்லியில் அச்சாகும் நாணயங்களில் ஒரு சிறு வட்டமும் மும்பை நகரில் அச்சடிக்கப்படும் நாணயங்களில் ஒரு சிறு டைமன் வடிவமும் நாணய சாலைகளை பிரத்யேக

அடையாள குறியீடாகப் பொறிக்கப்படுகிறது.

இந்தியாவை மராட்டிய மாநிலத்தின் நாசிக் கர்நாடக மாநிலத்தின் மைசூர் மேற்கு வங்க மாநிலத்தின் சல்போனி மத்திய பிரதேச மாநிலத்தின் தேவாஸ் ஆகிய நகரங்களில் இந்திய அரசுக்குச் சொந்தமான ரூபாய் நோட்டுகள் அச்சிடப்படும் ஆலைகள் உள்ளன. இன்றளவில் இந்தியாவில் புழக்கத்தில் உள்ள கரன்சிகளில் அதிகபட்சமாக 2,000 ரூபாய் புழக்கத்தில் உள்ளது. இதற்கு முன் 1938ஆம் ஆண்டு ஒரு முறையும் 1954 ஆம் ஆண்டு மற்றொரு முறையும் பத்தாயிரம் ரூபாய் மதிப்புள்ள கரன்சி அச்சிடப்பட்டு புழக்கத்திலிருந்தது.

ஒரே தாளில் இவ்வளவு அதிக மதிப்பிலான ரூபாய் புழக்கத்தில் விடுவது கருப்புப் பண பதுக்கல்காரர்களுக்குச் சாதகமாக அமையும்

என்பதால் 10,000 ரூபாய் கரன்சி திரும்பப் பெறப்பட்டது. இந்திய ரூபாயைக் குறிக்கும் குறியீடு அசாம் மாநிலத்தில் கவுகாத்தி ஐஐடி மாணவர் உதயகுமார் என்பவரால் வடிவமைக்கப்பட்டதாகும். ஆனால் காகிதப் பணத்தைப் பராமரிப்பது தேவையற்ற பெரும் பொருட்செலவை ஏற்படுத்துவதால் இப்பொழுது பல வெளிநாடுகளில் பிளாஸ்டிக்கில் வடிவமைக்கப்பட்ட ரூபாய் நோட்டுக்கள் புழக்கத்தில் உள்ளன. இதையடுத்து டெபிட் கார்டு என்ற பிளாஸ்டிக் அட்டை வடிவில் பணம் பாதுகாப்பாகப் பதுங்கிக் கொண்டது. அதையும் தாண்டி பணம் இப்போது மின்னணு முறையில் உருவத்தை மாற்றிக் கொண்டு உள்ளது. தகவல் தொழில்நுட்பப் புரட்சியில் பணத்தின் மதிப்பு வெறும் எண்களாகப் பாதாளம் வரை பாய்ந்து கொண்டுள்ளது.

உலகின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைக்கு ஒரு நொடிக்கும் குறைவான நேரத்தில் பல கோடி மதிப்புள்ள பணத்தை மடை மாற்றம் செய்யப்படுவது விஞ்ஞானத்தின் விந்தை ஆகிவிட்டது. இவ்வாறு பல நூற்றாண்டு வரலாற்றைக் கொண்ட பணத்தின் மதிப்பு இன்று பொருளாதார வளர்ச்சியின் அடிப்படையில் நாட்டுக்கு நாடு வெவ்வேறு மதிப்புகளாக மாறிக் கொண்டுள்ளது. உள்ளூர் சந்தையில் காய்கறிகள் வாங்குவது போல எந்த நாட்டின் கரன்சியையும் எவரொருவரும் வாங்கவோ அல்லது விற்கவோ இயலும். இந்திய ரூபாயில் 75 செலுத்தினால் ஒரு அமெரிக்க டாலரை வாங்க இயலும். இதேபோன்று இங்கிலாந்தின் பவுண்ட் ஐரோப்பிய கூட்டமைப்பின் யூரோ ஆகியவற்றை வாங்கவும் விற்கவும் இயலும். ஒரு காலத்தில் ஒரு நாட்டின் அரசாங்கம் கையிருப்பாக

வைத்துள்ள மொத்த தங்கத்தின் மதிப்புக்கு ஈடாக பணத்தை அச்சடித்து புழக்கத்தில் விடலாம் என்ற நடைமுறை மாறியுள்ளது. இன்று ஒரு நாட்டின் மொத்த பொருள் உற்பத்தி மற்றும் சேவைகளின் மதிப்பிற்கு ஈடாகப் பணத்தை அச்சடித்து புழக்கத்தில் விடும் நிலைக்கு மாறிவிட்டது. இதன்படி இந்த ஆண்டு GDP எனப்படும் இந்தியாவின் மொத்த பொருள் உற்பத்தி மற்றும் சேவைகளின் மதிப்பான சுமார் 225 லட்சம் கோடிக்கு ரூபாய் நோட்டுகளை அச்சடித்து புழக்கத்தில் விட இயலும்.

ஏற்றுமதி இறக்குமதி உள்ளிட்ட பல்வேறு பொருளாதார காரணிகளால் ஒரு நாட்டின் ரூபாய் மதிப்பு உயரவோ சரியவோ செய்யும். ஆனால் ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகத்தில் பொருத்து வெளிநாடுகளின் பண மதிப்புகளுக்கு ஏற்ப தங்கள் நாட்டு கரன்சியின் மதிப்பை தேவைக்கு

ஏற்ப செயற்கையாக உயர்த்தியும் குறைத்தும் வைத்துக்கொள்வது வழக்கமாகவே உள்ளது. இந்தியாவின் 1949, 1966, 1991 ஆகிய ஆண்டுகளில் இதுவரை நான்கு முறை ரூபாயின் மதிப்பு குறைந்துள்ளது. படிப்பதற்கான காகிதத்தை அதிக அளவு பயன்படுத்தும் நாடுகளின் பட்டியலில் இந்தியா இரண்டாவதிலும் சீனா முதலிடத்திலும் உள்ளன. காகிதம் என்றால் நாம் அன்றாட எழுதப் பயன்படுத்தும் காகிதங்கள் அல்ல. பாதுகாப்பு காரணங்களுக்காக வாட்டர்மார்க் செய்யப்பட்டு அதி உயரிய தொழில்நுட்பத்தில் பிரத்யேகமாகத் தயாரிக்கப்படும் இந்த வகைக் காகிதங்களை ஜெர்மன் நாட்டைச் சேர்ந்த நிறுவனமும் இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்த நிறுவனம் இந்தியாவுக்கு ஏற்றுமதி செய்கின்றன. இந்த கணக்கின்படி இந்தியா கரன்சிகளை அச்சடிக்க ஒவ்வொரு ஆண்டும் சுமார் பல ஆயிரம் டன் எடை

உள்ள காகிதங்களைப் பயன்படுத்துவதாகக் கூறப்படுகிறது. கரன்சி அச்சடிக்க ஆகும் செலவு மொத்த செலவு கணக்கில் காகிதத்திற்கு மட்டும் 40 சதவீதம் செலவிடப்படுவதாகச் சொல்லப்படுகிறது. ஆனால் பணம் என்பது நாம் நினைப்பது போல மதிப்பு மிக்கதல்ல. பொருட்கள் மற்றும் சேவைகளை மாற்றம் செய்யும்போது மட்டுமே அந்தப் பணம் மதிப்பு மிக்கதாக உருவம் காட்டுகிறது. ஆனாலும் மிகுந்த பாதுகாப்பு அம்சங்களைக் கொண்டது. இந்திய கரன்சிகளின் ஒவ்வொரு அங்குலத்திலும் ஏராளமான குறியீடுகள் பரவியுள்ளதைப் பார்த்தாலே அது புரியும். ஆனால் அவையெல்லாம் அளிக்கும் பாதுகாப்பை விட ஒற்றை வரியில் எழுதப்பட்டுள்ள ஒரு வாசகம் தான் ஒவ்வொருவரின் கையாக மாறி நாடு விட்டு நாடு கூடுவிட்டு கூடுபாயும் பணத்தின் அத்தனை சாகசங்களுக்கும் அடிப்படையானது.

அந்த வாசகம் தாள் நாணயத்தில் I Promise to pay the bearer sum of Rupees என்று அச்சடிக்கப்பட்டு அதன் கீழ் இந்திய ரிசர்வ் வங்கியின் ஆளுநர் கையெழுத்து இடப்படுகிறது.

இந்த இடத்தில் ரிசர்வ் வங்கி ஆளுநரின் அதிகாரம் என்பது உயர்ந்து நிற்கிறது. தாள் நாணயங்களில் பத்து ரூபாய் முதல் 2,000 ரூபாய் வரை ஏதாவது ஒன்றின் மதிப்பு அளிக்கப்பட்டிருக்கும். ஆனால் ஒரு ரூபாய்த் தாளில் மட்டும் இந்த வாசகங்கள் இடம் பெறுவதில்லை. காரணம் இந்திய நிதி அமைச்சகம் ஒரு ரூபாய்த் தாளில் அச்சிட்டு தனது நேரடி கட்டுப்பாட்டில் வைத்துள்ளது. அதாவது பணம் என்பது பிராமிசரி நோட்டு இந்திய ரிசர்வ் வங்கி குடிமக்களுக்கு அளிக்கும் வேறு ஒரு வடிவிலான ஒரு உறுதிமொழி பத்திரம். அந்த உறுதிமொழி பத்திரம் தான் நம்

மக்களின் இயக்கங்களுக்கு உத்தரவாதமாய் அமைந்திருக்கிறது.

# 2. உலகில் தோன்றிய முதல் வங்கி

ஏழை எளியோர் கடன் பெற இன்றும் இறுதி புகலிடமாய் விளங்குவது வங்கிகள் தான் என்பதை மறுக்கமுடியாது. சாதாரண மனிதர்கள் தொடங்கி நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு வங்கிகளின் சேவை அளப்பரியது. அதுமட்டுமின்றி வங்கிகளைச் சார்ந்த இயங்காமல் செயல்பட முடியாது என்ற நிலையை மனித சமூகம் கிட்டத்தட்ட எட்டி விட்டது எனலாம். வங்கிகளில் சேமிக்கப்படும் பொதுமக்களின் பணம் பல்வேறு கடன்களாகப் பிறருக்கு வழங்கப்படுகிறது. சேமிக்கப்படும் வாடிக்கையாளர்களால் எப்போது வேண்டுமானாலும் திரும்பப் பெறப்படுகிறது. எந்த சூழலிலும் இதைச் சாதுரியமாகக் கடனாகக்

கொடுத்து வட்டி வருமானம் ஈட்டுவது வங்கிகளின் முதன்மை தொழிலாக இருக்கிறது.

Bank என்ற ஆங்கில வார்த்தையின் வேர் என்பது ஜெர்மானிய மொழியான பாங்க் பிரெஞ்சு மொழியில் பாங்கே ஆகியவற்றிலிருந்து தோன்றியது தான் என்கிறார்கள் மொழியியல் ஆய்வாளர்கள். இந்தியாவில் வங்கித்தொழில் வரலாறு மேற்கு வங்க மாநிலத்தில் 1806ஆம் ஆண்டு தொடங்கியது என்றாலும் உலக அளவில் வங்கித் தொழிலில் தோற்றுவாய் கி.மு. 2000ல் தொடங்கியதாக வரலாற்று ஆய்வாளர்களால் கூறப்படுகிறது. அதன்படி மனிதகுலம் தோற்றுவித்த தொழில்களில் வங்கித் தொழில் என்பது மிகப் பழமை வாய்ந்த முன்னோடி தொழில் என்றும் கூறப்படுகிறது. தானிய உற்பத்திக்காக அப்போதே விவசாயக் கடன் வழங்கும் நடைமுறைகள் புழக்கத்திலிருந்துள்ளன.

இதற்கான வணிக ஒப்பந்தங்கள், கடன், வட்டி விகிதம், கடன் உத்தரவாதம் ஆகியவற்றைப் பற்றி ஹிமுராபி (Hammurabi) என்ற பாபிலோனியச் சட்ட நடைமுறைகள் 1772 ஆம் ஆண்டு வாக்கில் அமுலிலிருந்துள்ளதை பல்வேறு தொல்லியல் சான்றுகள் உறுதிப்படுத்தியுள்ளனர். இதுதவிர பண்டைய கிரேக்கத்திலும் ரோமானிய பேரரசு காலத்திலும் கோவில்களை மையமாக கொண்டு இந்த முறை இயங்கி வந்துள்ளது. பொதுமக்களிடம் வைப்பு நிதிகளைப் பெற்று அவற்றை வணிகர்களுக்குக் கடனாக அளித்து வட்டி வசூலிக்கும் நடைமுறைகளும் புழக்கத்திலிருந்துள்ளன. வியக்கத்தக்க வகையில் தங்க நாணயங்களைத் தற்காலத்தில் மதிப்பிடுவது போன்று கிரேக்கத்தில் நாணயங்களின் எடை மற்றும் தரப் பரிசோதனை நாணயமாற்று சந்தை ஆகியவற்றை உள்ளடக்கிய

அதிநவீன வங்கி நடைமுறைகள் திறம்படக் கையாளப்பட்டுள்ளது.

இதேபோன்று 2300 ஆண்டுகளுக்கு முன்னரே தற்காலத்தில் புழக்கத்திலுள்ள டிமாண்ட் டிராப்ட் (Demand Draft), பேங்கர்ஸ் பே ஆர்டர் (Bankers Pay Order) போன்ற நவீன முறைகளைச் செயல்படுத்தி உள்ளனர். நோட்டுப் புத்தகத்திலான கணக்கு வழக்குகள் அடங்கிய வங்கி பரிவர்த்தனைகள் அப்போது நடைமுறையிலிருந்துள்ளதும் நமது புருவத்தை உயர்த்த வைக்கிறது.

வங்கியியல் என்ற நவீன வார்த்தைக்கு ஏற்றவாறான செயல்பாடுகள் இத்தாலி, ஃப்ளாரன்ஸ், டேனிஸ், ஜெனிவா ஆகிய பணக்கார நாடுகளில் புழக்கத்தில் இருந்துள்ளன. இதையடுத்து வங்கி தொழிலின் வளர்ச்சி ஐரோப்பா கண்டம் முழுவதும் பற்றிப் பரவி அசுர

வேகத்தில் வளர்ச்சி அடையத் தொடங்கியது. இதன் எதிரொலியாகப் பிரிட்டிஷ் ஆட்சி காலத்தில் இந்தியாவிற்குள் வங்கிகள் தடம் பதிக்கத் தொடங்கின.

1786ஆம் ஆண்டு இந்தியாவில் முதன்முதலாக ஜெனரல் வங்கி தொடங்கப்பட்டது. இதையடுத்து இந்துஸ்தான் வங்கியும் அடுத்ததாக கிழக்கிந்திய கம்பெனியால் 1809ஆம் ஆண்டு தற்போதைய மேற்கு வங்க மாநிலத்தின் கொல்கத்தா நகரில் பெங்கால் வங்கி தொடங்கப்பட்டது. 1840 ஆம் ஆண்டு பம்பாய் வங்கியும் 1843 ஆம் ஆண்டு மெட்ராஸ் வங்கியும் தொடங்கப்பட்டன். பிறகு இவை மூன்றும் பிரசிடென்சி வங்கி என்று அழைக்கப்பட்டன. பின்பு 1920ஆம் ஆண்டு இந்த மூன்று வங்கிகளும் இணைக்கப்பட்டு இம்பீரியல் வங்கியாக பெயர் மாற்றம் பெற்றன.

கிழக்கிந்திய கம்பெனியால் தொடங்கப்பட்ட ஐரோப்பாவைச் சேர்ந்த தனியார்களே பிரசிடென்சி வங்கியின் பெரும்பான்மை பங்குதாரரர்களாக இடம்பெற்றிருந்தனர். பிறகு இந்த இம்பீரியல் வங்கிதான் இறுதியாக பாரத ஸ்டேட் வங்கியாக உருவெடுத்தது.

இந்தியர்கள் மட்டுமே உரிமையாளர்களாகக் கொண்ட அலகாபாத் வங்கி 1865 ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. லாகூரைத் தலைமையிடமாகக் கொண்டு பஞ்சாப் நேஷனல் வங்கியின் 1806 மற்றும் 1913 ஆம் ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலத்தில் பேங்க் ஆப் இந்தியா, சென்ட்ரல் பேங்க் ஆப் இந்தியா, பேங்க் ஆப் பரோடா, கனரா பேங்க், இந்தியன் பேங்க் மற்றும் பேங்க் ஆப் மைசூர் வங்கிகளும் தொடங்கப்பட்டன. இவற்றில் இன்றைய தேதிவரை பாரத ஸ்டேட் வங்கி மட்டும் தான் இந்தியாவின் மிகப் பெரிய வங்கியாக

விளங்குகிறது. 2019ஆம் ஆண்டுக் கணக்கின்படி பாரத ஸ்டேட் வங்கி ஊழியர்களின் மொத்த எண்ணிக்கை 2 லட்சத்து 57 ஆயிரமாகும்.

மத்திய மாநில அரசிகளின் வரவு செலவு கணக்குகள் பாரத ஸ்டேட் வங்கி மூலமே நடைபெறுகின்றன. வளரும் நாடுகளின் முதலீட்டுத் திட்டங்களுக்குக் கடன்கள் வழங்கும் ஒரு பன்னாட்டு நிதி நிறுவனமான உலக வங்கி இன்டர்நாஷனல் பேங்க் ஆப் ரீகன்ஸ்டிரக்ஷன் அண்ட் தேவலப்மன்ட் (International Construction and Development ) என்ற பெயரில் 1944 ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்டது.

பிரெட்டன் வுட்ஸ் (Bretton Woods system) நிறுவனங்கள் என்று அழைக்கப்படும் இந்த உலக வங்கியின் முக்கிய நோக்கங்களும் வரையறுக்கப்பட்டன. வறுமை ஒழிப்பு,

பருவநிலை மாறுபாடு, உணவு பாதுகாப்பு ஆகியவை முன்னிறுத்தப்படுகிறது. இதன் மூலம் சர்வதேச அளவில் மறுசீரமைப்பு மற்றும் வளர்ச்சி பணிகளுக்கான நிதி உதவி அளிக்க வேண்டும் என்பதுதான் அதன் நோக்கங்கள் உலக வங்கிக்கான மூலதனத்தில் பல நாடுகள் பங்களிப்பு செய்கின்றன. இதிலும் அதிக பட்ச பங்களிப்பை அளிப்பதில் உலகின் வல்லரசு நாடான அமெரிக்காவின் கையே ஓங்கியிருக்கிறது. அமெரிக்கா தவிர ஜப்பான் சீனா மற்றும் ஐரோப்பிய யூனியன் நாடுகள் இதில் முக்கிய பங்களிப்பு தருகின்றன. உலக வங்கி அமெரிக்காவின் கட்டுப்பாட்டில் இருப்பதால் பெரும்பாலும் அமெரிக்காவின் திட்டத்தையேச் செயல்படுத்துவதாகக் குற்றச்சாட்டுகள் எழுவதும் வழக்கமாக உள்ளது.

தனியார்மயமாக்கத்தில் இந்தியாவை

பொருத்தமட்டில் உலக வங்கியின் பங்களிப்பு பெரிது. இந்தியாவில் உருவாக்கப்படும் தேசிய நெடுஞ்சாலைகளில் சுங்க வரி வசூலிக்கும் முறை கொண்டுவரப்பட்டதற்கு உலக வங்கியின் கடன் உதவியே காரணம். இந்தியா என்றில்லாமல் உலக நாடுகள் பலவற்றிலும் தனியார் மயமாக்கலுக்கு உலக வங்கி ஒரு காரணமாக உள்ளது என்று கூறப்படுகிறது. பிரேசிலில் 1929ஆம் ஆண்டு நடைபெற்ற சர்வதேச நிதிய மாநாட்டில் ஒவ்வொரு நாட்டிலும் மைய வங்கி அமைக்க வேண்டியதன் அவசியம் வலியுறுத்தப்பட்டது. முதலாம் உலகப் போருக்குப் பின் பொருளாதாரப் பிரச்சினைகளைச் சமாளிக்க ராயல் கமிஷன் ஆஃப் இந்தியன் கரன்சி பைனான்ஸ் (royal commission of indian currency and finance) என்ற பெயரில் பிரிட்டிஷ் குழு அமைக்கப்பட்டது.

இந்த குழுவின் பரிந்துரையின் பேரில்

இந்தியாவில் 1935 ஆம் ஆண்டு ஏப்ரல் 1-ஆம் நாள் கொல்கத்தாவில் தலைமையிடமாகக் கொண்டு இந்திய ரிசர்வ் வங்கி நிறுவப்பட்டது. என ரிசர்வ் வங்கியின் தலைமையகம் கொல்கத்தாவிலிருந்து மும்பைக்கு மாற்றப்பட்டது. இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு இறுதியாக 1949ஆம் ஆண்டு ரிசர்வ் வங்கி தேசியமயமாக்கப்பட்டது.

இந்திய அரசமைப்பு சாசனத்தை வடிவமைத்த டாக்டர் அம்பேத்கர் எழுதிய பணத்தின் சிக்கலும் அதன் தீர்வும் என்ற ஆராய்ச்சிக் கட்டுரையின் அடிப்படையில் தான் இந்திய ரிசர்வ் வங்கிக்கான அடிப்படை சட்டமும் 1934 ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டது என்று கூறப்படுகிறது.

இதையடுத்து 1955 ஆம் ஆண்டு ஸ்டேட் பேங்க் ஆப் பைகானூர் அண்ட் ஜெய்ப்பூர் (state bank of bikaner and jaipur) மற்றும் ஜெய்ப்பூர் ஸ்டேட் பாங்க்

ஆப் ஹைதராபாத் ஸ்டேட் பாங்க் ஆப் இந்தூர் ஸ்டேட் பாங்க் ஆப் மைசூர் ஸ்டேட் பாங்க் ஆப் சௌராஷ்டிரா ஸ்டேட் பாங்க் ஆப் பாட்டியாலா ஸ்டேட் பாங்க் ஆப் திருவாங்கூர் ஆகிய ஏழு வங்கிகள் ஸ்டேட் பேங்க் ஆப் இந்தியாவுடன் இணைந்தன.

இந்தச் சூழலில் இந்திய வங்கித் துறையில் 1969ஆம் ஆண்டு ஜூலை மாதம் 19 ஆம் நாள் மிக முக்கிய திருப்பம் ஏற்பட்டது. அப்போதைய பிரதமர் இந்திரா காந்தி இந்தியாவில் விவசாயம் தொழில் வளர்ச்சி மற்றும் வேலை வாய்ப்பை அதிகப்படுத்தும் நோக்கில் சென்ட்ரல் பேங்க் ஆப் இந்தியா, பேங்க் ஆப் இந்தியா, பஞ்சாப் நேஷனல் பேங்க், கனரா பேங்க், யுனைடெட் கமர்சியல் பேங்க், சிண்டிகேட் பேங்க்,பேங்க் ஆஃப் பரோடா, யுனைடெட் பேங்க் ஆஃப் இந்தியா, யூனியன் பேங்க் ஆப் இந்தியா, தீனா பேங்க், அலகாபாத் பேங்க்,

இந்தியன் பேங்க், இந்தியன் ஓவர்சீஸ் பேங்க், பேங்க் ஆஃப் மகாராஷ்டிரா ஆகிய 14 பெரிய தனியார் வங்கிகளை தேசியமயமாக்கினார்.

இந்திய ரிசர்வ் வங்கியே ஒரு ஆளுநர் நான்கு துணை ஆளுநர்கள் நிதி அமைச்சக பிரதிநிதிகள் இருவர் அரசால் நியமிக்கப்படும் இயக்குனர்கள் பத்து பேர் மற்றும் நான்கு மண்டலங்களில் மூலம் நான்கு பேர் ஆக மொத்தம் இருபத்தியோரு இயக்குனர்கள் கொண்ட மத்திய வாரியம் தான் இயக்குகிறது.

இந்திய ரிசர்வ் வங்கி இந்தியாவுக்கு மட்டும் இல்லாமல் மேலும் இரண்டு நாடுகளுக்கு மத்திய வங்கியாக செயல்பட்ட ஒரு ஆச்சரிய வரலாறும் உண்டு. பர்மா 1937-ஆம் ஆண்டு தனிநாடு ஆனபோதிலும் 1947 ஏப்ரல் வரை நம் இந்திய ரிசர்வ் வங்கிதான் பர்மாவுக்கும் மத்திய



Economical Colourful NEC TILES

Published from Bombay, Delhi and Ahmedabad

# THE TIMES OF IN

## 14 TOP BANKS ARE NA

### Ordinance follows unanimous Cabinet decision

"The Times of India" News Service

NEW DELHI, July 19.

WITHIN an hour of the formal exit of Mr. Morarji Desai from the Union Government, the Cabinet today decided to nationalise 14 major commercial banks thus providing an immediate economic justification for the Prime Minister's political decisions taken during the week.

*Nationalised banks*

*Nanda called to Delhi*

### *A vital step, says Indira*

...

வங்கியாக செயல்பட்டுள்ளது. இடையில் 1942 முதல் 1945 வரை மூன்று ஆண்டுகள் மட்டும் ஜப்பான் ஆதிக்கத்தின் கீழ் பர்மா இருந்த காலக்கட்டம் நீங்களாக ஏழு ஆண்டுகளுக்கும் ரிசர்வ் வங்கிதான் பர்மாவுக்கும் ரிசர்வ் வங்கியாக இருந்துள்ளது. இதேபோன்று 1947 ஆம் ஆண்டு இந்தியா பாகிஸ்தான் பிரிவினை இழந்துவிட்ட போதிலும் 1948 ஜூன் மாதம் பாகிஸ்தான் ஸ்டேட் வங்கி உருவாகும் வரை இந்திய ரிசர்வ் வங்கிதான் பாகிஸ்தான் நாட்டிற்கும் ரிசர்வ் வங்கியாக செய்யப்பட்டது. உலகின் எல்லா நாடுகளிலும் பணக்கொள்கை எனப்படும் Monetary Policy தீர்மானிப்பது சென்ட்ரல் பாங்க் என்று அழைக்கப்படுகிறது.

அதுபோலவே இந்தியாவின் கொள்கைகளைப் பொறுத்தவரை இந்திய ரிசர்வ் வங்கி தீர்மானிக்கிறது. அதன்படி இந்தியாவில் உள்ள

அனைத்து வங்கிகளையும் NBFC எனப்படும் வங்கியல்லாத நிதி நிறுவனங்களையும் கட்டுப்படுத்துகிறது.

இதற்காக SLR எனப்படும் Statutory Liquidity Ratio, CRR எனப்படும் Cash Reserve Ratio, Bank Rate, Repo Rate என்று பல அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன. இவ்வாறு வங்கிகளின் வங்கியாக இயங்கும் ரிசர்வ் வங்கியின் நேரடி கண்காணிப்பு மற்றும் கட்டுப்பாட்டின் கீழ் இன்று பொதுத்துறை வங்கிகள், தனியார் வங்கிகள், வெளிநாட்டு வங்கிகள், மத்திய மாநில கூட்டுறவு வங்கிகள், சிறு தொழில் மேம்பாட்டு வங்கிகளும் இயங்குகின்றன. பல்வேறு நெருக்கடியான பொருளாதார காலகட்டத்திலும் இந்திய வங்கித் துறையை இரும்புக் கோட்டையாக நின்று கட்டிக் காத்ததில் இந்திய ரிசர்வ் வங்கிக்கு முதன்மையான பங்கு உண்டு. ஆனாலும்

இத்தனை சீரும் சிறப்பும் பெற்ற இந்திய ரிசர்வ் வங்கியின் ஆளுநராக இதுவரை பெண்கள் யாரும் பொறுப்பு வகிக்கவில்லை.



ஆண்டு 200 கோடிக்கு அதிகமான முதலீடு கொண்ட ஆந்திர வங்கி, பஞ்சாப் மற்றும் சிந்து வங்கி, நியூ பேங்க் ஆப் இந்தியா, விஜயா வங்கி, கார்ப்பரேஷன் வங்கி, ஓரியண்டல் பாங்க் ஆப் காமர்ஸ் ஆகிய ஆறு வங்கிகள் நாட்டுடமையாக்கப்பட்டன. இதனால் இந்தியாவில் 80 சதவீத வங்கிகள் மத்திய அரசின் கீழ் கொண்டுவரப்பட்டன. இதையடுத்து இந்திய வங்கித்துறை அசுர வளர்ச்சியை நோக்கி பாயத் தொடங்கியது. வங்கிகளின் கிளைகள் பெருகி வாடிக்கையாளர்களின் வைப்புத் தொகை கணக்குகளில் பெரும் வளர்ச்சி ஏற்பட்டது. மத்திய அரசின் நிதிக் கொள்கை மாற்றங்களால் தொழில் கடன்கள் வழங்குவதற்காக நெறிமுறைகளும் தளர்த்தப்பட்டு சிறு மற்றும் குறு தொழில்கள் வளர்ச்சி அடைந்தன. வேலைவாய்ப்புகள் பெருகின. இந்தியாவின் குக்கிராமங்கள் வரை

வங்கிகள் ஊடுருவின. வளர்ச்சி அடைந்த மாநிலங்களின் வங்கிகளின் சேவைகள் விரிவடைந்தன. வங்கி சேவைகள் குடி மக்களை சென்றடைவது எளிமையானது.

இன்றைய தேதியில் சாமானியர்களின் வாழ்வுடன் பின்னிப் பிணைந்திருக்கும் கூட்டுறவு இயக்கத்தின் அதிகாரபூர்வ வரலாறு 1904ஆம் ஆண்டு தொடங்கியது. இன்றளவில் பெரும்பாலான கூட்டுறவு வங்கிகள் மாநில அரசுகளின் கண்காணிப்பின் கீழ் இயங்கி வருகின்றன. இந்த நிலையில் தாராளமயக் கொள்கை 1991ஆம் ஆண்டு அறிமுகமானதையடுத்து இந்தியாவில் இனி தனியார் வங்கிகள் நாட்டுடமையாக்கப்படாது என மத்திய அரசு அறிவித்தது. ஆனாலும் வங்கிகள் இணைப்பு என்பது சூழ்நிலைகளுக்கு ஏற்ப அவ்வப்போது நடைபெற்றது. 2019ஆம்

ஆண்டு விஜயா வங்கியும் தேனா வங்கியும் பேங்க் ஆப் பரோடா வங்கி உடன் இணைக்கப்பட்டன. அதேசமயம் புதிய தனியார் வங்கிகள் பல தொடங்கப்பட்டு இதில் 49 விழுக்காடு பங்குகள் தனியார் கட்டுப்பாட்டிற்குச் சென்றன. இயக்குனர் குழுவில் தனியார் அதிகாரிகள் இடம் பிடித்தனர். ரிசர்வ் வங்கி இயக்குனர் குழுவிலும் தனியார் வங்கிப் பிரதிநிதிகள் இடம் பிடித்தனர். தனியார் வங்கிகளின் வருகையால் சாதாரண மக்களுக்கு கடன் உதவி கடனுதவி வழங்கப்பட்டாலும் அதிக அளவிலான கடனுதவி தனியார் பெரு நிறுவனங்களை நோக்கியே பாய்ந்தது. தனியார் வங்கிகள் கூட்டு சேர்ந்தும் பெரும் நிறுவனங்களுக்கு கடன் உதவிகள் வழங்கின. தனியார் மற்றும் அரசு வங்கிகளும் கூட்டாகச் சேர்ந்து கடனுதவி வழங்கும் நடவடிக்கைகளும் அதிகரித்தன. இவ்வாறான நிறுவனங்களின்

கடன்களை வசூலிக்க நீதிமன்றங்களின் உதவியின்றி வங்கிகள் நேரடியாக நடவடிக்கை எடுக்க உதவும் SARFAESI (SARFAESI ACT 2002) போன்ற சட்டங்கள் கொண்டுவரப்பட்டன.

ஏடிஎம் என்று அழைக்கப்படும் தானியங்கி பணப் பரிவர்த்தனை இயந்திரத்தை இந்தியாவில் முதன்முதலாக எச்எஸ்பிசி வங்கி புழக்கத்திற்குக் கொண்டுவந்தது. இதேபோன்று இணையவழி பரிவர்த்தனை சேவையை முதன்முதலாக இந்தியாவில் ஐசிஐசிஐ வங்கி அறிமுகம் செய்தது. இந்தியன் வங்கி வெளிநாட்டில் முதன் முதலாகக் கிளைத் தொடங்கிய வங்கி என்ற பெருமையைப் பெற்றது. ஆனபோதிலும் BRICS அமைப்பில் இடம்பெற்றுள்ள நாடுகளில் இந்தியாதான் மிகக் குறைந்த எண்ணிக்கையிலான ஏடிஎம் களின் எண்ணிக்கையைக் கொண்டுள்ளது. ஒரு லட்சம் பேருக்கு ரஷ்யாவில் சராசரியாக

164 ஏடிஎம்கள் அமைக்கப்பட்டுள்ளன. இதுவே பிரேசில் 107 சீனாவில் 81 தென் ஆப்பிரிக்காவில் 68 என்ற எண்ணிக்கை யிலான ஏடிஎம்களை கொண்டுள்ள நிலையில் இந்தியாவில் மட்டும் ஒரு லட்சம் பேருக்குச் சராசரியாக 22 எடிஎம் எந்திரங்களை மட்டுமே கொண்டுள்ளதாகச் சர்வதேச நாணய நிதியமான IMF என ஆங்கிலத்தில் அழைக்கப்படும் International Monetary Fund அமைப்பு தெரிவித்துள்ளது. ரிசர்வ் வங்கி வெளியிட்டுள்ள புள்ளி விவர தகவலின்படி கடந்த 2017-18 மற்றும் 2018-19 ஆகிய இரண்டு நிதி ஆண்டுகளிலும் முன்னெப்போதும் இல்லாத அளவுக்கு இந்தியர்கள் மிக அதிக அளவில் ஏடிஎம்களை பயன்படுத்தியுள்ளனர். இத்தனைக்கும் 2016 ஆம் ஆண்டு மேற்கொண்ட பணமதிப்பிழப்பு நடவடிக்கைகளுக்குப் பின்னர் ரொக்க பரிவர்த்தனையைக் குறைத்து

டிஜிட்டல் முறையிலான பரிவர்த்தனைகளில் அதிகரிக்க வேண்டும் என்ற பிரச்சாரம் தீவிரமாக மேற்கொள்ளப்பட்டது.

வாடிக்கையாளர்கள் தங்களுக்கு உடனடியாக பணப் பரிமாற்றம் செய்வதற்காக மின்னணு பரிவர்த்தனைகள் 1970களிலேயே உலகம் முழுவதும் அறிமுகமாகத் தொடங்கிவிட்டது. டெபிட் கார்டு இணைய வங்கி சேவைகள் இந்தியாவில் பிரபலம் அடையத் தொடங்கிய காலத்தில் பணமில்லா பரிவர்த்தனைகளில் தொழில்நுட்ப வளர்ச்சி இந்தியாவில் வேகு வேகமாக உச்சத்தைத் தொட்டது. இன்று ரொக்க பரிவர்த்தனைகளுக்கு ஏராளமான தொழில் நுட்ப நடைமுறைகள் வந்துவிட்டன. ஒவ்வொருவரின் கைப்பேசியிலும் அடங்கியிருக்கும் யுபிஜ செயலிகளை இதற்குச் சான்றாக உள்ளது. பணமதிப்பிழப்பிற்கு முன்பு நாம் பயன்படுத்திய

டிஜிட்டல் பரிவர்த்தனைகளுக்கும் அதற்குப் பின்பு பொதுமக்கள் பயன்படுத்திக் கொண்டு உள்ள பணப் பரிவர்த்தனை தொழில்நுட்பங்களுக்கு இடையே பெரும் வேறுபாடுகள் ஏற்பட்டுள்ளன. சொல்லப்போனால் இணையப் பரிவர்த்தனைகளைப் புழங்கத் தெரியாத நபர்களைக் கூட இதன் உள்ளே இழுத்து வந்த பெருமையும் இவற்றுக்கே சாரும். இதில் குறிப்பிடத்தகுந்த அம்சம் push moments. இன்று நாம் பணம் அனுப்புவதற்குப் பயன்படுத்திக் கொண்டிருக்கும் கியூ ஆர் கோடு தொழில்நுட்பம் ஆடியோ மூலம் பணம் அனுப்பும் கூகுள் பேயின் தொழில்நுட்பம் அரசின் UPI வசதி ஆகியவற்றின் ஆதிக்கம் கடந்த இரண்டு ஆண்டுகளில் பெரும் வளர்ச்சியை எட்டியுள்ளது.

இந்தியாவில் ரிசர்வ் வங்கிச் சட்டம் நடைமுறைக்கு வந்த அதே 1934 ஆம் ஆண்டில்

தான் சுவிட்சர்லாந்திலும் வங்கித்துறை சட்டம் நடைமுறைக்கு வந்தது. வெளிநாட்டைச் சேர்ந்த தனிநபர்களுக்கு வங்கிக் கணக்கு தொடங்க பெரும்பாலான நாடுகளின் வங்கிகள் அனுமதிப்பதில்லை. ஆனால் சுவிட்சர்லாந்தில் வெளிநாடுகளைச் சேர்ந்த தனிநபர்கள் வங்கி கணக்கு தொடங்க அனுமதி உண்டு. சுவிட்சர்லாந்து அரசு வங்கி சட்டப்படி வங்கியில் கணக்கு வைத்திருக்கும் வாடிக்கையாளர்கள் குறித்த விவரங்களை வெளியில் சொன்னால் அது குற்றவியல் குற்றமாகக் கருதப்படுகிறது. இதனால் சுவிஸ் வங்கிகள் கருப்புப் பணம் பதுக்கி பெரும் பணக்காரர்களின் இரும்புக் கோட்டையாகத் திகழ்கிறது.

வங்கிகளுக்கும் சுற்றுலாவுக்கும் உலகப் புகழ்பெற்ற சுவிட்சர்லாந்து தேசம் சுமார் 400 ஆண்டுகளாக ரத்தம் இன்றி எந்த யுத்தமும் இன்றி

இன்று வரை முற்றிலும் சமாதான தேசமாகவே தன்னை நிலை நிறுத்திக் கொண்டுள்ளது. உலகில் ஏறக்குறைய எல்லா தேசங்களிலும் அணி சேர்ந்து அதி பயங்கரமாக மோதி மடிந்த முதல் மற்றும் இரண்டாம் உலகப்போர்களில் கூட சுவிட்சர்லாந்து நாடு நடுநிலை வகித்ததேயன்றி போர்க் கலங்களை எட்டிக் கூட பார்க்கவில்லை.

ஐரோப்பாவிலேயே இந்த ஒரு தேசம்தான் எத்தகைய நெருக்கடியிலும் சமாதானமாகப் பல காலமாக பிற நாட்டு எதிரி தேசங்களுடன் அணிசேரமல் நடுநிலையான சாதுவான தேசமாக இருந்தது. இந்த தன்மையே சுமார் 300 ஆண்டுகால சுவிஸ் வங்கிகளின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் மையப்புள்ளி ஆகும். அதன்படி ஆரம்பக் காலத்திலேயே சுவிட்சர்லாந்து மாநிலங்களின் அமைப்புகள் கூடி ஸ்விஸ் வங்கிகள் எக்காரணம் கொண்டும்

வாடிக்கையாளர்களைக் குறித்த விவரங்களை யாரோடும் பகிர்ந்து கொள்ளக் கூடாது என்று தீர்மானம் நிறைவேற்றியது. அதன்படி தங்கள் வாடிக்கையாளர்களின் ரகசியத்தைப் பாதுகாப்பதாக உறுதி அளித்து அந்த உறுதி இப்படி எத்தனையோ போராட்டங்களுக்கு இடையிலும் இம்மியளவும் அசைந்து கொடுக்காமல் வாடிக்கையாளர்களின் ரகசியங்களை சுவிஸ் வங்கிகள் பாதுகாத்து வருகின்றன. எந்த ஒரு தேசத்திலும் ஒருவர் மீது ஏறும் கிரிமினல் குற்றச் சாட்டு புகாரி ஒரு சாதாரண வங்கிகளில் உள்ள அவரின் கணக்குகளை அந்த அரசாங்கத்தால் நொடிப்பொழுதில் முடக்கி நடவடிக்கை எடுக்க இயலும். ஆனால் சுவிஸ் வங்கிகளில் அந்த கதையெல்லாம் நடக்கவே நடக்காது. உலகின் எந்தக் கோடியில் இருப்பவரும் அவரும் பற்பல நெருக்கடிக் காலங்களிலும்

கூட ஸ்விஸ் வங்கிகளை நம்பி பணத்தைப் பதுக்குவதற்கு இதுவும் ஒரு காரணம். மேலும் பல ஆண்டுகளாக சுவிட்சர்லாந்தின் கரன்சியான சுவிஸ் ஃபிராங்கின் மதிப்பு துளி அளவும் குறையாமல் நிலையாக இருப்பதும் ஸ்விஸ் வங்கிகளின் மீதான நம்பிக்கை கூடுவதற்கு முக்கிய காரணமானது.

சுவிட்சர்லாந்து அரசாங்கம் தனது குடியுரிமை சட்டங்களின் மூலமும் தொழிலாளர் சட்டங்களின் மூலமும் சுவிஸ் வங்கிகளின் நோக்கத்திற்கு முழு ஆதரவும் அளித்துள்ளது. எந்த வகையிலும் எந்த ஒரு தனி மனிதரின் தனிப்பட்ட விவகாரங்களில் தலையிடுவதில்லை என்பது சுவிட்சர்லாந்து அரசின் முக்கிய கொள்கையானது. சுவிட்சர்லாந்து வங்கிகளில் எந்த ஒரு வாடிக்கையாளர்களின் அனுமதியின்றி அவரது கணக்குகளை வெளியிட்டால் அந்த வங்கிகளின் மீது

சுவிட்சர்லாந்து நீதிமன்றங்களில் நஷ்ட ஈடு கேட்டு வழக்குத் தொடரவும் முடியும். இதுவே சுவிஸ் வங்கி வாடிக்கையாளர்களின் பாதுகாப்பிற்கு மேலும் ஒரு உறுதியான கவசமாக உள்ளது. உலகம் முழுக்க வங்கிகளில் சேவை அதிகரித்த வண்ணமே உள்ளது. இந்தியாவில் அட்டவணையிட்டு வணிக வங்கிகள் பொதுத்துறை வங்கிகள் தனியார் வங்கிகள் மற்றும் அயல்நாட்டு வங்கிகளும் பல செயல்படுகின்றன. தனித் தனியாகச் செயல்படும் வங்கிகளாக இருந்தாலும் இந்த வங்கிகள் ஒருங்கிணைந்த வங்கி வளையமாகச் செயல்படுகின்றன. இந்த வலையமைப்பில் மொத்தம் 53 ஆயிரம் கிளைகளும் 17000 தானியங்கி பணம் வழங்கும் நிலையங்களும் செயல்படுகின்றன. குக்கிராமங்கள் தொட்டு மலையகங்கள் வரைக்கும் தங்கள் வலையை விரித்திருக்கும் இந்த வங்கிகள் அன்றாட

வாழ்வியல் ஓட்டத்திற்கான ஒரு அங்கமாகவே விளங்குகின்றன.

# 3. ஆலமரத்துக்கு அடியில் உருவான பங்குச்சந்தையின் வரலாறு

மும்பை தலால் வீதி என்றால் உடனே நினைவுக்கு வருவது பங்குச் சந்தைதான். விண்ணைத்தொடும் அளவிற்கு உயர்ந்து நிற்கும் பங்குச்சந்தை கட்டிடம்தான் காட்சியாக விரியும். தலால் என்றால் மராத்தி மொழியில் புரோக்கர் அல்லது இடைத்தரகர் என்று பொருள். மும்பையின் தலால் வீதி அமெரிக்காவின் பங்குச் சந்தை இருக்கும் வால் ஸ்ட்ரீட்டைக் போன்று உலக அளவில் பிரசித்தி பெற்றது. தலால் வீதி மும்பை சென்ட்ரல் ரயில் நிலையத்திலிருந்து கூப்பிடு தூரத்தில் உள்ளது.

இந்த வீதியில் தான் மிகப் பெரும் நிதி நிறுவனங்களின் கட்டிடங்களும் அமைத்துள்ளன. இந்தக் கட்டிடங்களின் வரிசையில் பிரோஸ் ஜீஜீபாய் (Phiroze Jeejeebhoy) கோபுரம் என்ற கட்டிடம் உலக அளவில் பிரசித்தி பெற்று விளங்குகிறது. இருபத்தி ஒன்பது தளங்களைக் கொண்டது இந்த பிரோஸ் ஜீஜீபாய் டவர். இந்தக் கட்டத்தில்தான் இந்தியாவின் மிக முக்கிய பொருளாதார அடையாளங்களில் ஒன்றாக விளங்கும் மும்பை பங்குச் சந்தை இயங்குகிறது. தற்போது மும்பை பங்குச் சந்தையின் நிர்வாக இயக்குநராகவும் முதன்மை செயல் அதிகாரியாகவும் ஆசிஷ் குமார் சவுகான் என்பவர் பணியாற்றி வருகிறார்.

மும்பை பங்குச் சந்தையின் நுழைவாயிலின் முன்பாக வெண்கலத்தால் வடிவமைக்கப்பட்ட காளைமாடு ஒன்று ஆக்ரோசமாக நிற்கும் சிலை நிறுவப்பட்டுள்ளது. பங்குச்சந்தை

உயர்வின் குறியீடாய் கொம்பினால் குத்தி தூக்கும் காளைமாடு நிறுவப்பட்டுள்ளது. சந்தை சரிந்தால் எதிரிகளை ஓங்கி ஒரே அடியில் அடித்து வீழ்த்துவதே கரடியின் குறியீடாக உருவகப்படுத்துகிறது. Bull and Bear மார்க்கெட் என்பது மும்பை பங்குச்சந்தை மட்டுமல்ல உலகம் முழுவதிலுமுள்ள பங்குச்சந்தை முதலீட்டாளர்களின் பொதுவான குறியீடாக கடைப்பிடிக்கப்படுகிறது.

முதன்முதலில் அமெரிக்காவின் நியூயார்க் பங்குச் சந்தை வளாகத்தில் சுமார் 7 ஆயிரம் பவுண்ட் எடையில் 11 அடி உயரமும் 16 அடி நீளமும் கொண்ட வெண்கலத்தால் ஆன இந்த காளைச் சிலை ஆர்ட்டுரோ டி மோடிக்கா (Arturo Di Modica) என்ற பிரபல சிற்பக்கலைஞர் வடிவமைக்கப்பட்டு 1989ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. அமெரிக்கச் சுற்றுலாப் பயணிகளின் கவனத்தை ஈர்க்கும் பல

சிலைகளில் பங்குச் சந்தையின் குறியீடாக இந்த காளைச்சிலையும் அடக்கும்.

இந்த சிலையை மாதிரியாக வைத்துத் தான் மராட்டிய மாநிலத்தின் சோலாப்பூர் நகரைச் சேர்ந்த பிரபல சிற்பக்கலைஞர் பகவான் ராம்பூர் என்பவரால் சுமார் 1000 கிலோ எடையில் வெண்கலத்தால் வடிவமைக்கப்பட்ட காளைச் சிலை 2008ஆம் ஆண்டு மும்பை பங்குச் சந்தை வளாகத்தில் நிறுவப்பட்டது.

இன்று ரிலையன்ஸ், டாட்டா, கோல்கேட், கேட்பரி போன்ற உலகப் புகழ் பெற்ற பெரும் தொழில் நிறுவனங்கள் தொடங்கி சாதாரண ஊறுகாய் தயாரிப்பு நிறுவனங்கள் வரை ஏறத்தாழ ஐயாயிரத்திற்கும் அதிகமான நிறுவனங்கள் உள்ளன. இந்த நிறுவனங்களின் பங்குகளில் நாள்தோறும் பல லட்சம் கோடி ரூபாய் அளவிற்கு

வர்த்தகம் நடைபெறும் துணையாக இருக்கிறது இந்தப் பங்குச் சந்தை. இந்த பங்குச்சந்தையின் வரலாறு பல தகவல்களை உள்ளடக்கியது.

ஆசியக் கண்டத்தின் முதல் பங்குச்சந்தை தோற்றுவிக்கப்பட்டது ஆசியாவில் முன்னேறிய நாடுகளான சீனாவிலும் ஜப்பானிலும் சிங்கப்பூரில் அல்ல. இந்தியாவில் தோன்றிய மும்பை பங்குச் சந்தைதான். 1850ஆம் ஆண்டு ஆசிய கண்டத்திலேயே முதன்முதலாக உருவான இந்தப் பங்குச் சந்தையின் வரலாறு ஒரு ஆலமரத்தடியிலிருந்து தான் தொடங்குகிறது. அப்போதைய மும்பை டவுன் ஹாலுக்கு எதிரே அமைந்திருக்கும் கார்னிமான் சர்க்கில் (Horniman Circle) என்ற இடத்தில்தான் சந்தைக்கான முதல் புள்ளி போடப்பட்டது.

அங்கிருந்த ஆலமரத்தடியில் தான் நம் ஊர்

பஞ்சாயத்தைப் போலப் பங்குச் சந்தைக்கான விற்றல் வாங்கல் நடவடிக்கைகளில் 4 தரகர்களால் சிறிய அளவில் தொடங்கப்பட்டது. நாளுக்கு நாள் பங்கு வர்த்தகம் சூடுபிடிக்கத் தொடங்கியது. விரல் விட்டு எண்ண தொடங்கிய வணிகர்களே வந்து போன நிலையில் இந்திய ஜவுளி சந்தையில் ஏற்பட்ட அளப்பரிய மாற்றம் சந்தையின் வளர்ச்சிக்கு உதவியது.

முதலீட்டாளர்களின் ஆதரவு பெருகியதால் இடநெருக்கடி ஏற்பட்டதோடு கடும் போக்குவரத்து நெருக்கடியும் ஏற்பட்டது. இதையடுத்து 1874 ஆம் ஆண்டு மும்பை மாநகரில் பிரபல வர்த்தக மையமான தலால் வீதிக்கு மும்பை பங்குச்சந்தை நிரந்தரமாக இடம் பெயர்ந்தது. அதுவே இன்று உலகின் ஒன்பதாவது மிகப்பெரிய சந்தை என்ற பெயரில் பெரும் விருட்சமாக நிமிர்ந்து நிற்கிறது. இந்த ஆண்டு மே மாதம் வரைக்கும் 2 லட்சத்து 18

ஆயிரத்து 730 டிரில்லியனுக்கும் மேலான சந்தை முதலீடுகள் புழங்கியிருக்கின்றன. தொழிலைத் தொடங்க வேண்டுமென்றால் அதற்கான முதலீட்டைப் பெற பணம் தேவைப்படுகிறது. அந்த மூலதனத்தைத் திரட்ட பங்குகளை வெளியிட்டு நிதியும் திரட்டப்படுகிறது. அவ்வாறு மூலதனம் திரட்டுவதற்காக வெளியிடப்படும் நிறுவனங்களின் பங்குகளை முதலீட்டு நோக்கில் விலைக்கு வாங்கப் பொதுமக்கள் முன்வருகின்றனர்.

அவர்களே அந்நிறுவனத்தின் பங்குதாரர்களாகவும் மாறுகிறார்கள். அதாவது ஒரு தொழில் நான்கைந்து பேர்களை மட்டும் பங்குதாரர்களாக மட்டும் கொண்டிருப்பதில்லை. மாறாக 4-5 லட்சம் பேர்களைப் பங்குதாரர்களாகச் சேர்த்துக் கொள்வதாகும். உதாரணமாக ஒரு கோடி ரூபாய் மூலதனம் தேவைப்பட்டால்

அதை பத்து ரூபாய் மதிப்புள்ள 10 லட்சம் எண்ணிக்கையிலான சம பங்குகளாகப் பிரிக்கப்படுகிறது. சிறுதுளி பெருவெள்ளம் என்ற அடிப்படையில் ஒரு பங்கின் விலை பத்து ரூபாய் என்று பொதுமக்கள் பலரிடமும் விற்கப்படுகிறது. அப்படி இருக்கும்போது அந்த நிறுவனத்தின் பல்வேறு காரணிகள் அலசி ஆராயப்படுகின்றன. நிதியியல் வல்லுநர்களின் கணிப்பைக் கேட்டறிந்து எதிர்காலத்தில் இந்த நிறுவனத்தின் பங்குகளின் விலை நிச்சயமாக உயருமா என்று ஆராய்ந்து அந்த நம்பிக்கையின் பேரில் தங்களது வசதிக்கேற்ப அந்த பங்குகளைப் பணம் கொடுத்து விலைக்கு வாங்குவார்கள். இதுவே முதல் நிலை பங்குச்சந்தை முதலீடு எனப்படுகிறது.

ஒரு நூற்றாண்டுக்கு முன்பே தொடங்கப்பட்டாலும் மும்பை பங்குச் சந்தைக்கு

முறையான வழிகாட்டு நெறிமுறைகள் இன்றி இயங்கி வந்தது. பங்குச் சந்தைகளில் ஏற்ற இறக்கங்களை அறிந்துகொள்ள உதவும் குறியீட்டு எண் 1986 ஆம் ஆண்டு தான் முதன் முதலாக மும்பை பங்குச் சந்தைக்கு சென்செக்ஸ் என்ற பெயரில் நிர்ணயிக்கப்பட்டது.

நடைபாதைகளில் நாம் அன்றாடம் காணும் கூவிக்கூவி பொருட்களை விற்கும் முறையில்தான் பங்குச் சந்தைகளில் பரிவர்த்தனைகள் நடை பெற்றது. இந்தியாவின் புகழ்மிக்க வணிக நிறுவனங்களில் பெயரையும் அவற்றின் பங்கு விலையையும் தொண்டை வலிக்கக் கத்திக் கத்திப் பேசி பேசியே வியாபாரத்தில் ஈடுபடுவது வழக்கமாக இருந்தது.

சட்டமன்றம் நாடாளுமன்றம் போன்றவற்றைப் பொதுமக்கள் மற்றும் கல்லூரி மாணவர்கள்

பார்வையிட அனுமதிப்பது போலப் பங்குச் சந்தையையும் கண்ணாடி அறைக்கு வெளியே நின்று பார்வையிடப் பல தரப்பு மக்களுக்கும் சிறப்பு அனுமதி வழங்கப்பட்டது. இந்தியாவில் 20க்கும் அதிகமான பங்குச்சந்தைகள் மாநிலங்கள் வாரியாக இயங்கிக் கொண்டிருந்தாலும் மும்பை பங்குச் சந்தையில் வர்த்தகமாகும் நிறுவனப் பங்குகளின் விலையைப் பின்பற்றித்தான் மற்ற பங்குச் சந்தைகளில் வர்த்தகம் நடைபெறும். உதாரணமாக மும்பை பங்குச் சந்தையில் ஒரு நிறுவனத்தின் பங்கு விலை 2 ரூபாய் அதிகரித்தால் சென்னை டெல்லி கொல்கத்தா உள்ளிட்ட பிற மாநில பங்குச் சந்தைகளில் இரண்டு ரூபாய் குறைவாக வர்த்தகமாகும் அந்த நிறுவனத்தின் பங்குகளை விரைவாக வாங்கி குவிக்க ஏற்படும் போட்டியில் முகவர்களிடையே பெரும் தள்ளுமுள்ளு ஏற்படும். முகவர்கள்

தரையில் உருண்டு புரளும் அளவுக்கு நிலைமை மோசமாகும். அவ்வாறான பதட்டமான சூழலில் பங்குகளை விற்கும் முகவர் தனது ஒப்புதலை உறுதிப்படுத்தும் பதற்றத்தில் இவன் இவன் என்று கத்திக் கூச்சலிட்டவாறே வாங்கும் முகவரின் தோள்பட்டையில் ஓங்கி அடிப்பது அல்லது வாங்கும் முகவர் முந்திக்கொண்டு டேக்கன், டேக்கன் என்று விற்கும் முகவரின் தோள்பட்டையில் ஓங்கி அடித்து ஒப்பந்தத்தை உறுதிப்படுத்துவார். இந்த காட்சிகள் அனைத்தும் பங்குச்சந்தை வர்த்தகத்தை முதன்முறையாக நேரில் பார்ப்பவர்களுக்கும் மிகவும் விசித்திரமான அனுபவமாக அமையும். 1996ஆம் ஆண்டு வாக்கில்தான் பங்கு பரிவர்த்தனைகள் டிஜிட்டல் தொழில்நுட்ப முறைகள் நடைமுறைக்கு வந்தன. இன்று மும்பை பங்குச் சந்தையில் ஒரு நிறுவனத்தின் பங்கை 6 மைக்ரோ

வினாடிகளுக்கும் குறைவான நேரத்தில் இந்தியாவின் எந்த மூலையிலிருந்து இன்டர்நெட் உதவியுடன் வாங்கவும் விற்கவும் இயலும் அளவிற்குத் தொழில்நுட்ப வளர்ச்சியை அடைந்துள்ளது.

பங்குச்சந்தையின் ஆதிமூலம் என்பது முதன் முதலில் எகிப்து நாட்டிலிருந்து தொடங்குகிறது. எகிப்தின் தற்போதைய தலைநகரமான கெய்ரோவில் முகலாய யூத வியாபாரிகள் இடையே நடைபெற்ற கொடுக்கல் வாங்கல் தான் முதல் பங்குச் சந்தையின் தோற்றுவாய் என்று பொருளாதார வரலாற்று ஆய்வாளர்களால் சுட்டிக்காட்டப்படுகிறது. ஆனால் பெரும்பாலான வரலாற்று ஆய்வுகள் பங்குச் சந்தையின் தொடக்க காலமாக 12-ஆம் நூற்றாண்டின் பிரான்ஸ் நாட்டை குறிப்பிடுகின்றன. இதையடுத்து 13ஆம் நூற்றாண்டில் இத்தாலி நாட்டின் பிரபல வெனிஸ்

நகரில் இயங்கிய வங்கிகள், அரசாங்க கடன் பத்திரங்களை வாங்கி விற்கும் வர்த்தகத்தை நடத்தி வந்ததாகவும் காலப்போக்கில் இந்த அரசாங்க கடன் பத்திர வர்த்தகம் இத்தாலி நாட்டின் மற்ற பகுதிகளுக்கும் வேகமாகப் பரவிப் பிரபலமடையத் தொடங்கியதாகவும் கூறப்படுகிறது. இவற்றை வாங்கி விற்பதற்காக பணிக்கு அமர்த்தப்பட்டவர்கள்தான் புரோக்கர்கள் என்றும் பிற்பாடு முகவர்கள் என்றும் அழைக்கப்பட்டனர். 16ஆம் நூற்றாண்டில் நெதர்லாந்து நாட்டின் தற்போதைய தலைநகரமான ஆம்ஸ்டர்டாமில் முதல் அதிகாரப்பூர்வ பங்குச் சந்தை உருவெடுத்தது. அந்த பங்குச் சந்தையில்தான் காகிதத்தில் அச்சடிக்கப்பட்ட டச்சு கிழக்கிந்திய கம்பெனி நிறுவனத்தின் பங்கு பத்திரங்கள் முதன் முதலாக விற்பனை செய்யப்பட்டது.

இதையடுத்து 1792 ஆம் ஆண்டு 24 முதலீட்டாளர்கள் ஒன்றுகூடி அமெரிக்காவின் நியூயார்க் நகரின் வால் ஸ்ட்ரீட் பகுதியில் பட்டர்நூட் மரத்தின் அடியில் ஒரு பங்குச் சந்தையைத் தொடங்கி வர்த்தகம் செய்தார்கள். இந்த இருபத்தி நான்கு முதலீட்டாளர்களால் கையெழுத்தான ஒப்பந்தம் அமெரிக்க நிதிச் சந்தை வரலாற்றில் ஒரு முக்கியமான ஆவணமாகக் கருதப்படுகிறது.

அவைபோல உலக அளவில் மிகப்பெரிய சந்தைகளாக உருவெடுத்து நிற்பது அமெரிக்காவின் நியூயார்க் பங்குச் சந்தையும் இரண்டாவதாக நாஸ்டாக் பங்குச் சந்தையும் ஆகும். இதற்கு அடுத்தபடியாகத் தான் உலகின் மற்ற நாட்டுப் பங்குச் சந்தைகள் பட்டியலில் இடம்பெற்றுள்ளன.

பங்குகளின் விலையில் ஏற்ற இறக்கங்களைப்

பார்த்துப் பழகியிருந்த வால்வீதி முதன்முதலாக வீழ்ச்சியைக் கண்டது. வால் ஸ்டீரிட் கிராஸ் என்ற வால்வீதி வீழ்ச்சி முதலீட்டாளர்களின் வணிகக் கனவைச் சிதைத்தது.

அமெரிக்காவில் 1929 ஆம் ஆண்டு ஏற்பட்ட பொருளாதார வீழ்ச்சி 1939 வரை சுமார் பத்து வருடங்கள் நீடித்தது. அமெரிக்காவில் ஏற்பட்ட இந்தப் பங்குச் சந்தை வீழ்ச்சி வால்வீதியை பீதியில் ஆழ்த்தியது. 1929ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 29ஆம் தேதி அமெரிக்காவை அதலபாதாளத்திற்கு தள்ளிய இந்த நாளை கறுப்புச் செவ்வாய் அதாவது Black Tuesday என்று அழைக்கப்படுகிறது. இது 1987ம் ஆண்டு கறுப்புத் திங்கள், 2001ஆம் ஆண்டு டாட்காம் நீர்குமிழி வெடிப்பு 2008 ஆம் ஆண்டின் நிதி நெருக்கடி என்று பல்வேறு வீழ்ச்சிகளை அமெரிக்கப் பங்குச் சந்தைகள் சந்தித்தன. அமெரிக்கப் பங்குச் சந்தை

என்றாலே வாரன் பஃபெட் என்ற பெயரை அறியாத பங்குச் சந்தை முதலீட்டாளர்களே இந்த உலகில் இருக்க முடியாது.

90 வயதைக் கடந்து வணிக உலகில் பலம் பொருந்திய ஆளுமையாக நிற்கும் வாரன் பஃபெட் தனது பதினோராவது வயதில் பங்குச் சந்தை முதலீட்டைத் தொடங்கியவர். இன்று போர்ப்ஸ் பத்திரிக்கையின் உலகின் முன்னணி பணக்காரர்களின் பட்டியலில் தொடர்ந்து இடம்பிடித்து வருகிறார். உலகம் முழுவதும் உள்ள பங்குச்சந்தை முதலீட்டாளர்களின் மானசீக குருவாக போற்றப்படுபவர் அவர். இதேபோல மும்பை பங்குச் சந்தையும் இந்தியாவில் பல வியாபார காரணங்களை உருவாக்கி உதவியுள்ளது. மும்பை பங்குச்சந்தை உருவான 1850 ஆம் ஆண்டுக்குப் பிறகு அடுத்தடுத்து சென்னை, அகமதாபாத்,

கொல்கத்தா, டெல்லி, பெங்களூர் தொடங்கி அசாம் மாநிலத்தில் கவுகாத்தி நகரம் வரை இந்தியா முழுவதும் மொத்தம் 20க்கும் அதிகமான பிராந்திய பங்குச்சந்தைகள் உருவாகின. இந்தியாவில் இயங்கும் எந்த பங்குச்சந்தையும் அரசாங்கத்தினுடையது அல்ல. பங்குச்சந்தை தரகர்கள் தான் அந்த உருவாக்குகிறார்கள் நிர்வகிக்கிறார்கள். இந்திய அரசின் நிதிநிலை அறிக்கை ஜிடிபி எனப்படும் மொத்த உள்நாட்டு உற்பத்தி இன்ஃப்லேஷன் என்ற பணவீக்கம் இந்திய அரசின் நிதிப் பற்றாக்குறையான பிஸ்கல் டெபிசிட் இந்தியாவில் ஏற்றுமதிக்கும் இறக்குமதிக்கும் இடையில் உள்ள வித்தியாசத்தைக் குறிக்கும் பேலன்ஸ் ஆப்ட்ர் போன்ற அடிப்படை பொருளாதார காரணிகளுக்கு ஏற்ப பங்குச் சந்தையும் ஆட்டுவிக்கப்படும்.

இதுமட்டுமின்றி அமெரிக்காவின் ஃபெடரல்

ரிசர்வ் வங்கி வட்டி விகிதத்தை மாற்றி அமைக்கும் போதும், வெளியுறவுக் கொள்கைகளில் ஏற்படும் மாற்றங்கள் காரணமாகவும், சர்வதேச நிதி நிறுவனங்கள் இந்தியப் பொருளாதாரத்தைப் பற்றிய மதிப்பீட்டை அறிக்கைகளை வெளியிடும் போதும், சர்வதேச கச்சா எண்ணெய் விலை மாறும்போதும், பருவநிலை மாற்றங்கள் மற்றும் நாடுகளுக்கு இடையேயான போர் பதட்டச் சூழல்கள் என்று உலகளாவிய அளவிலான பல்வேறு காரணிகள் காரணமாக இந்தியப் பங்குச் சந்தைகளில் பெரும் தாக்கங்கள் ஏற்படுவதும் வாடிக்கையான ஒன்றே. ஆனாலும் தமிழ்நாடு உட்பட இந்திய அளவில் குறிப்பிட்ட சில வர்த்தக சமூகத்தினரைத் தவிர ஏனைய மக்களுக்கு 1990ஆம் ஆண்டுவரை பங்குச் சந்தை என்ற வார்த்தை ஒன்று இந்தியாவில் இயங்குவதே தெரியாது. அந்தச் சூழலில் புதிய

பொருளாதாரக் கொள்கைகள் இந்தியாவில் அமல் படுத்தப்பட்டதையடுத்தும் இந்தியாவின் பிரபல தொழிலதிபரான திருபாய் அம்பானியின் வருகையைத் தொடர்ந்து இந்திய நடுத்தர வர்க்கத்தினரின் பார்வை பங்குச் சந்தையை நோக்கித் திரும்ப வைத்தது என்றால் மிகையல்ல. பங்குச் சந்தை வளர்ச்சி அடைந்த சில ஆண்டுகளில் மும்பை பங்குச் சந்தையின் நட்சத்திர அந்தஸ்து கொண்ட தரகராகவும் பிரபல முதலீட்டராகவும் இந்திய நடுத்தர வர்க்கத்தினரின் கனவு நாயகராகவும் வலம் வந்தவர் ஹர்ஷத் மேத்தா. குஜராத் மாநிலத்தின் மிகச் சாதாரண குடும்பத்திலிருந்து மும்பைக்குப் பிழைக்க வந்த ஹர்ஷத் மேத்தா 1990ஆம் ஆண்டு வாக்கில் இந்தியப் பங்குச் சந்தைகளை தலைகீழாகப் புரட்டிப் போட்டவர்.

பங்குச்சந்தை முதலீட்டாளர்களின் முன்மாதிரி

நாயகனாக இந்திய ஊடகங்கள் அவரை கொண்டாடின. ஆனால் கெட்டிக்காரனின் பொய்யும் புளுகும் எத்தனை நாளுக்கு என்பதைப் போல அவர் மீதான ஊழல் புகார்கள் வெளிவரத்தொடங்கின. இந்திய வங்கிகளின் பணத்தை மோசடியாகக் கையாண்டு பங்குகளைச் செயற்கையாக ஊதிப் பெருக்கி பங்குச் சந்தைகளை ஆட்டுவித்ததாக ஊழல் விவகாரம் வெடித்தது. இந்த ஊழல் இந்திய அரசியலையே ஆட்டம் காண வைத்தது. அவரது முறைகேடுகள் இந்திய எல்லையைத் தாண்டி உலக நாடுகளையும் திகைக்க வைத்தது. இதனால் உள்நாட்டு மற்றும் வெளிநாட்டு முதலீட்டாளர்கள் இந்தியப் பங்குச் சந்தை மீது நம்பிக்கை இழக்கத் தொடங்கினர்.

1992 ஆம் ஆண்டின் தொழிலதிபர் திருபாய் அம்பானியை விட அதிகமாக வருமான வரிக் கட்டும் நபராக மாறிய ஹர்ஷத் மேத்தா அடுத்த 10

ஆண்டுகளில் ஒரு தண்டனைக் கைதியாக அரசு மருத்துவமனை நாற்காலியில் அமர்ந்த நிலையில் யாருமற்ற அனாதையாக இறந்து போனார்.

இதையடுத்தே கண்களில் விளக்கெண்ணெய்யை ஊற்றிக் கொண்டு கண்கொத்திப் பாம்பாகக் கண்காணிக்க ஒரு அமைப்பு தேவைப்பட்டது. இந்தியப் பங்குச்சந்தைகளில் நெறி முறைப்படுத்தி வழிநடத்துவதற்காகச் செபி (SEBI) என்ற அமைப்பு என்ற அமைப்பு இந்திய நிதி அமைச்சகத்தின் நேரடிக் கட்டுப்பாட்டில் இயங்க தொடங்கியது. ஆனாலும் திருடனாய் பார்த்துத் திருந்தாவிட்டால் திருட்டை ஒழிக்க முடியாது என்ற பாடல் வரிகளுக்கு ஏற்ப மற்றொரு ஊழலும் வெளிச்சத்திற்கு வந்தது. அதுதான் ஹர்ஷத் மேத்தாவிடம் பயிற்சி பெற்ற கேத்தன் பவிக் என்பவரால் ஏற்படுத்தப்பட்ட அந்த மாபெரும்

பங்குச் சந்தை ஊழல். ஹர்ஷத் மேத்தா வங்கிக் கடன் பத்திரங்களை முறைகேடாகப் பயன் படுத்தினார் என்றால் அவரது சீடர் கேத்தரின் பவிக் வங்கி பே ஆர்டர்களை முறைகேடாகப் பயன்படுத்தி பங்குச்சந்தையில் பங்குகளைச் செயற்கையாக ஊதிப் பெருக்கி பல ஆயிரம் கோடிகளை அள்ளிக் குவித்தார்.

இதையடுத்து சத்யம் கம்ப்யூட்டர்ஸ் என்ற பிரபல ஐடி நிறுவனம் முறைகேடாக ஆவணங்களைத் தயார் செய்து தன் நிறுவனத்தின் வளர்ச்சியைப் போலியாகச் சித்தரித்துக் காட்டியது. இதன் மூலம் ஏமாற்றிப் பெற்ற முதலீட்டாளர்களின் கோடிக்கணக்கான பணத்தை அவர்களுக்குத் தெரியாமல் ரியல் எஸ்டேட் வர்த்தகத்தில் முடக்கியதால் பங்குச்சந்தை படுபாதாளத்தில் தள்ளப்பட்டது.

இதுவும் இந்தியப் பங்குச் சந்தைகளின் வரலாற்றில் கறை படிந்த சம்பவங்களில் ஒன்றாகும். இதையடுத்து முறைகேடுகளுக்கு முற்றுப்புள்ளி வைக்கத் திட்டமிடப்பட்டது. சாதாரண முதலீட்டாளர்களுக்கு நம்பிக்கை அளிக்கும் விதத்திலும் 100 சதவீத வெளிப்படைத் தன்மையுடனும் பாதுகாப்புடன் கூடிய பங்கு பரிவர்த்தனையை உறுதிப்படுத்தத் தீர்மானிக்கப்பட்டது. இந்த தீர்மானத்தின் மூலம் அமைக்கப்பட்டதுதான் இந்தியாவின் மற்றொரு பொருளாதார அடையாளமான நேஷனல் ஸ்டாக் எக்ஸ்சேஞ்ச் எனப்படும் தேசிய பங்குச்சந்தை. அதன்படி இன்று காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை இந்தியாவின் குக்கிராமத்தில் உள்ள சாதாரண மக்கள் கூட நொடிப் பொழுதில் தான் விரும்பும் நிறுவனத்தின் பங்குகளை வாங்கவோ அல்லது விற்கவோ இயலும் அளவிற்கு மும்பை

மற்றும் தேசிய பங்குச் சந்தைகளின் டிஜிட்டல் தொழில்நுட்பம் உச்சத்தை எட்டியுள்ளது. இதனால் ஒரு காலத்தில் கொடி கட்டிப் பறந்த பிராந்திய பங்குச் சந்தைகள் அனைத்தும் மும்பை மற்றும் தேசிய பங்குச் சந்தைகள் உடனான போட்டிகளில் தாக்குப் பிடிக்க முடியாமல் தங்கள் வரலாற்றையும் தனித் தன்மையும் இழந்து மூடு விழாக்களைச் சந்தித்தன. பங்குச் சந்தை என்றால் அங்குப் பட்டியலிடப்பட்டுள்ள நிறுவனங்களின் பங்குகளை வாங்கி விற்பது மட்டுமல்ல. அரசாங்கம் மற்றும் தனியார் நிறுவனங்களின் கடன் பத்திரங்கள், மியூச்சுவல் ஃபண்ட் பரஸ்பர நிதி திட்டங்கள், கச்சா எண்ணெய் அமெரிக்க டாலரின் மதிப்பு அடிப்படையிலான பல்வேறு நாட்டு நாணயங்கள், தங்கம், வெள்ளி, பிளாட்டினம், அலுமினியம் போன்ற உலோகங்களில் விலையை அடிப்படையாகக் கொண்ட பாத்திரங்கள்

உள்ளிட்டவையும் முதலீட்டாளர்களால் வாங்கி விற்கப்படுகின்றன. ஆகமொத்தத்தில் ஒன்று தொழில் நிறுவனங்கள் தங்களுக்குத் தேவையான மூலதனத்தைத் திரட்டிக் கொள்கிறது. மறுபுறம் அவ்வாறு மூலதனத்தைத் திரட்டுவதற்காக வெளியிடப்பட்ட பங்குகளை வாங்கி விற்று முதலீட்டாளர்களை லாபம் அடையவும் செய்கிறது. இப்படியான பங்குச்சந்தையின் இயக்கம் என்பது இரண்டு பக்க நுழைவாயில்களைக் கொண்ட மாபெரும் போர்க்களம் போன்றது என்றால் அது மிகையில்லை. பணத்தைப் பாதுகாப்பாக வைக்க ஒரு வழிதான் உண்டு. யாருக்கும் தெரியாமல் பணத்தைச் சுருட்டி குழிதோண்டி மண்ணுக்குள் புதைத்து வைக்கலாம். அதிகரித்துச் செல்லும் பணவீக்கத்தினால் பணமதிப்பிழந்து போனாலும் பத்திரமாகவாவது இருக்கும். சுமார் 30 ஆண்டுகளுக்கு முன்னால் 5000 ரூபாய்க்கு

வாங்கிய ஒரு பவுன் தங்கம் இன்று 50 ஆயிரமாக அதிகரித்துள்ளதும், கடந்த மாதத்திற்கு முன்பு மாதம் 50 ரூபாய்க்கு வாங்கிய ஒரு லிட்டர் சமையல் எண்ணெய் 200 ரூபாயாக அதிகரித்துள்ளதும் பணவீக்கம் எனப்படுகிறது. பணவீக்கம் இவ்வாறு பணத்தின் மதிப்பைக் காலப்போக்கில் செல்லாக்காசாகி விடுகிறது. மதிப்பிலான பணத்தை வைத்துக் கொண்டு என்ன செய்வது ? பணம் என்றால் அதன் மதிப்பு பெருக வேண்டும். அப்படிப் பெருக வேண்டும் என்றால் ஒரு நிமிடம் கூட பணத்தை ஓய்வு எடுக்க அனுமதிக்கக் கூடாது. ஏனென்றால் பணம் ஓய்வெடுத்து உறங்கினாலும் பணவீக்கம் ஒருபோதும் உறங்குவதில்லை என்பதால் பணவீக்கத்தை வெல்லும் அளவிற்குப் பணத்தின் மதிப்பும் உயர வேண்டும் என்றால் அதற்குப் பங்குச்சந்தையைத் தவிர்த்து வேறு வழியில்லை என்றே நிதி இயல் வல்லுநர்களால்

வாதிடப்படுகிறது. இவ்வாறு இந்தியா உட்படப் பல உலக நாடுகள் அனைத்திலும் பங்குச் சந்தைகள் ஒரு நாட்டின் பொருளாதார ஏற்ற இறக்கங்களைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகவும் அளவு கோளாகவும் விளங்குகின்றன.

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3.

போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள்

Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே

ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை "யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்" என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது "Creative Commons" எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் "All Rights Reserved" எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் "All Rights Reserved" என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை "Creative Commons" உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும்

அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள்

வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து

கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை "Creative Com-

mons” உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்

2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க

தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும்

பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஒர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

<துவக்கம்>

உங்களது வலைத்தளம் அருமை

[வலைதளத்தின் பெயர்].

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள்

அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM

FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

</முடிவு>

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் “Creative Commons License”-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

## மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

# கணியம் அறக்கட்டளை

**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

## தற்போதைய செயல்கள்

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com/
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

## கட்டற்ற மென்பொருட்கள்

- உரை ஒலி மாற்றி – Text to Speech

- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஐஓஎஸ் செயலி
- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

## அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்
- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ்

காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்

-  கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
-  மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
-  எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
-  தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
-  http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
-  தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
-  குழந்தைக் கதைகளை ஒலி வடிவில்

வழங்குதல்

- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_-

preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

## வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில்

மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

# நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**

**Account Number : 606 1010 100 502 79**

**Union Bank Of India**

**West Tambaram, Chennai**

**IFSC – UBIN0560618**

BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**

**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.